## ஹை பவர் ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவை—
## அது வெட்டவெளிச்சம்.

உங்கள் மகன் துணிகளை அழுக்காக்கிக் கொள்வதில் பலே சூரனா? அப்படியானால் உங்களுக்குத் தேவை : அழுக்கை அகற்றிட ஒரு பலே சூரன்; ஹை பவர் ஸர்ஃப்—வல்லவனுக்கு வல்லவன்.

அதிக வலுவுடைய பொருள்கள் அடங்கியது ஹை பவர் ஸர்ஃப், அதிக சலவை சக்தி: தூசி, அழுக்கு எதனையும் சுவடு தெரியாமல் அகற்றிடும். படு அழுக்கான துணிகளையும் கூட பளிச்சிட வைக்கும். வர்ணத் துணிகளுக்கும் உகந்தது ஸர்ஃப்—தூய்மை ஒளி மிளிர வைக்கிறது.

ஹை பவர் ஸர்ஃப்—குடும்பத்தில் உள்ள அனைவரின் துணிகளுக்கும் அதிக வெண்மை அதிக ஒளி, கேட்பானேன், வேறெந்த சலவைப் பவுடரையும் விட ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.






**வேறெந்த சலவைப் பவுடரையும் விட ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-SU-220-2012 TM

# Bharat TV NOW COMES TO YOU WITH SOLID STATE TECHNOLOGY





## 20" Urvashi Solid State
(Shutter Type)

- Laminated sliding shutters
- 3 ICs single printed circuit board
- Automatic picture control
- Multichannel tuner
- 20 cm dual cone double speaker

## 20" Solid State BT 202
(without shutters)

- 20 cm 'Hi-fi' dual cone speaker
- Acoustically designed cabinet
- 3 ICs
- Multichannel tuner
- Automatic picture control

**T. V. TRONICS**

96, T. H. Road, Madras-81 Phone: 554074

74, Siruvallur Road, Madras-11 Phone: 661533

7, Sunkurama Chetty Street, Madras-1 Phone: 27427

---



மெட்டி ஒலிப் பெண்ணே!
காஞ்சி சில்க்
பட்டு அழகு கண்டு —

மலராத கண்ணும் உண்டோ? மயங்காத பெண்ணும் உண்டோ? காஞ்சி சில்க் பட்டுச் சேலைகள் கலைநயமுடையவை! விலை நியாயமானவை! நீடித்து உழைப்பவை! நிறைவு தருபவை! இன்னும் நவீன மில் துணி வகைகள்! நயமான கைத்தறி ரகங்கள்!

## காஞ்சி சில்க் பேலஸ்

6/53, பாண்டி பஜார், தி. நகர், சென்னை-600 017

எந்த சேலைக்கும் மேட்ச் ஆகும் சோளிகள் எங்களிடம் உண்டு.
எந்த சோளிக்கும் மேட்ச் ஆகும் ஸ்லீவ்ஸ் ஏராளம் உண்டு.

RAJATHI

# Kalki Shopping Page

மல்லிகைபோல் மென்மையாகத்
துல்லியமாய் மாவரைக்க....

## "கணேஷ் & செளபாக்யா"
மாவரை இயந்திரங்கள்



- உத்திரவாத உழைப்பு
- கவர்ச்சிகர அமைப்பு

தயாரிப்பாளர்:
## ஸ்ரீ கணேஷ் இண்டஸ்டிரீஸ்
119, சத்தி ரோடு, ஈரோடு-1.
(போன்: 73513)







# வெஸ்டெர்லி

ஒரு "டெக்னோகிராட்ஸ் கம்பைன் பி. லிட்.,
சென்னை 600 058" தயாரிப்பு

national 744

## நவசக்தி நிலையத்தாரின்
## உன்னதத் தயாரிப்பு!



## திருஷ்டி நிவர்த்தி யந்திரம் - (ரூ. 42)
## திருஷ்டி நிவர்த்தி டாலர் - (ரூ. 35)
(மும்மூர்த்தி அம்சம் கொண்டது)
(பூஜையில் வைத்தது)

- லாரி, கார், ஸ்கூட்டர் ஆகிய வாகனங்களின் விபத்துக்களைத் தடுக்க —
- கறவைப் பசுக்கள் கறவை குறையாமல் பலன்தர —
- வீடு, தொழிற்சாலை, மற்றும் வியாபார ஸ்தலங்கள் செல்வமுடன் விருத்தியடைய —
- கண் திருஷ்டியால் ஏற்படும் உடல் உபாதைகள் வராமலிருக்க —

உறுதுணையாக இருக்கும் சக்திமிக்க சாதனம்!
தபாலில் பெற 25% முன்பணமனுப்பி வி.பி.பி.யில் பெறலாம். விரிவான கேட்லாக்கு பெற 25பை தபால் தலையுடன் எழுதவும்.

## நவசக்தி நிலையம்
153, லாயிட்ஸ் ரோடு, கோபாலபுரம்,
சென்னை-600 086. (போன்: 812013)



## பார்த்தாஸ்
## டெக்ஸ்டைல்ஸ்

உங்கள் ஜவுளி தேவைகளுக்கு
தென்னகத்தின் தலைசிறந்த
ஜவுளி ஸ்தாபனம்

## பார்த்தாஸ்
நாகர்கோவில்

கோட்டயம், எர்ணாகுளம்,
சங்கனாச்சேரி, ஆற்றிங்கல்,
காயங்குளம் & K.L.R. பாம்பே

Mgd. by
M. Srinivasa Reddiar

# கர்ப்பிணிகள் கவனிக்க...

## டாக்டர் பேசுகிறார்

ஒரு கர்ப்பிணிப் பெண். காரியாலயத்தில் வேலை பார்ப்பவள். என்னிடம் பரிசோதனைக்கு வந்தாள். இரண்டாவது தடவை வந்தபோது ''உனக்கு எழுதிக் கொடுத்த மாத்திரைகளை மறக்காமல் வாங்கி விழுங்குகிறாயா? நன்றாகச் சாப்பிடுகிறாயா?'' என்று விசாரித்தேன்.

''மருந்துகளைச் சாப்பிடுவதில்லை டாக்டர். இந்த மாதிரி வைட்டமின்கள் சாப்பிட்டால் குழந்தை பருத்துவிடுமாம். வெளியே வருவது கஷ்டமாகிவிடுமாம். பிறகு வயிற்றில் ஆபரேஷன் செய்து குழந்தையை எடுக்க வேண்டும். குழந்தை வெளியே வந்து வளரட்டுமே?'' என்றாள் அவள்.

எனக்குச் சிரிப்பு வந்தது. டாக்டருக்கு ஸிஸேரியன் ஆபரேஷன் செய்தால் பணம் கிடைக்கும். அதற்காக இப்படியெல்லாம் டானிக் எழுதிக் கொடுக்கிறார்கள் எனச் சிலர் கருதுகிறார்கள். இப்படி நினைப்பவர்கள் அறியாமையில் உழல்கிறார்கள். வைட்டமின்கள் குழந்தையை மட்டும் பருக்கச் செய்வதில்லை. தாய்க்கும் தேவையான பலத்தை அளிக்கின்றன.

இன்னொரு பெண் ரொம்ப அருமையாக வளர்ந்தவள். கருத்தரித்திருப்பதை அறிந்ததிலிருந்து ஓய்வு எடுக்க ஆரம்பித்துவிட்டாள். ஒரு வேலையும் செய்வது இல்லை. இது அவ்வளவு நல்லதல்ல.

கர்ப்பம் தரித்திருக்கும் பெண் சாதாரணமாகத் தன் தினசரித் தேவைகளைக் குறைத்துக்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. சொல்லப்போனால் அவள் சுறுசுறுப்பாக இருப்பதே நல்லது.

சில சந்தர்ப்பங்களில் கர்ப்பிணிப் பெண்ணுக்கு நீரில் உப்பு, சிறிது உதிரப் போக்கு, ரத்தக் கொதிப்பு போன்றவை ஏற்படுவதுண்டு. அத்தருணத்தில் வைத்தியர்கள் ஆலோசனைப்படி பூரண ஓய்வு எடுப்பதும் அவசியம்.

வேலைக்குப் போகும் பெண்கள் முடிந்த வரை போகலாம். கடைசி இரண்டு மாதங்கள் பஸ் பிரயாணம் தவிர்க்க வேண்டும். அந்தக் குலுக்கல் நல்லதல்ல.

ஏதேனும் சிக்கலாகத் தோன்றினாலோ, குழந்தை சரியான நிலையில்தான் உள்ளதா என்பதை அறியும் அவசியமோ இருந்தால் எக்ஸ்ரே எடுக்கச் சொல்வதுண்டு. இதற்காகப் பயப்பட வேண்டாம். எக்ஸ்ரே ஒளி வயிற்றில் உள்ள குழந்தையைப் பாதிக்காது.

பிரசவத்துக்கு இந்தக் காலத்தில் பயமே இல்லை. பெண்ணால் இதற்கு மேல் தாக்குப் பிடிக்க முடியாது எனத் தெரிந்தால் அறுவைச் சிகிச்சையால் குழந்தையை எடுத்துவிடலாம். ஆயிரத்துக்கு ஒரு கேஸ்தான் இப்பொழுதெல்லாம் பிரசவத்தில் தோல்வியாகிறது.

பிரசவித்து மூன்றாம் நாளே நடக்கலாம். ஆனால் குறைந்தது ஐந்து மாதமாவது கணவனுடன் சேர்ந்திராமல் தனியே படுக்க வேண்டும்.

கர்ப்பமாக இருக்கும்போது சுலபமாகக் காற்றுப் புகக்கூடிய பருத்தி ஆடையே சிறந்தது. நாகரிகம் என்ற பெயரில் இறுக்கமான உடைகள் உடுத்துவது, வயிற்றை இறுக்க அழுத்திக் கட்டுவது போன்றவை விபரீத பலன்களைத் தந்துவிடும்.

இன்னொரு முக்கிய விஷயம். கர்ப்ப காலத்தில் கடைசி நான்கு வாரங்கள் கணவருடன் உடலுறவு வைத்துக் கொள்ளக் கூடாது. கர்ப்பப்பை லேசாக விரிய ஆரம்பிக்கும் அத்தருணத்தில் சுகாதாரத்துக்கு முக்கியத்துவம் தராமல் உடலுறவு வைத்துக்கொண்டதால் ஒரு தம்பதிக்குக் குழந்தை பிறக்கும்போதே வியாதியால் பீடிக்கப்பட்டு மாய்ந்து போயிற்று. அந்தத் தாயின் எட்டு மாதச் சிரமம் பலனில்லாமல் போனது வருந்தத்தக்கதல்லவா? இப்படி ஏதாவது நடந்து விட்டால் வைத்தியரிடம் உடனடியாகத் தெரிவித்தாலாவது ஓரளவு சரி செய்யலாம். இதிலெல்லாம் சற்று உஷாராக இருப்பது அவசியம்.

கருவுற்ற பெண் எப்போதும் சுத்தமாக இருக்க வேண்டும். சுற்றுப்புறத்தையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

தகவல்: டாக்டர் ருக்மிணி சௌரிராஜன்

பேட்டி: குயிலி ராஜேஸ்வரி.



கர்ப்பிணிகள் எப்போதும் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். வீணைவாசிப்பது, ஓவியம் தீட்டுவது போன்ற பிடித்தமான கலைகளில் ஈடுபடவேண்டும். கர்ப்பிணிகள் மகிழ்ச்சியாக இருப்பதற்கென்றே ஏற்பட்டதுதான் வளைகாப்பு போன்ற நிகழ்ச்சிகள்.

# வட்டமேஜை

# ரத்தியைப் போல் ஒரு நித்யா!



● அடபோங்க சார்! உம்மால் எனக்கு ஐந்து ரூபாய் நஷ்டம். நான் அட்டையில் இருப்பது ரதிதான் என்றேன். என் நண்பன் பிரதீப்போ 'ரதி இல்லை' என்று கூற, உடனே நான் உறுதியாக ஐந்து ரூபாய் பந்தயம் கட்ட, அட்டைப் பட விளக்கப் பக்கத்தை நோக்கினேன். என் முகம் முதல் வரியிலேயே தொங்கி விட்டது.

சென்னை-4 மயிலை ரகு

● ஒற்றன் 4×1 சித்திரக் கதையை அதற்குள் முடித்து விட்டீர்கள்! துப்பறியும் சினிமா பார்த்தது போன்ற திருப்தி ஏற்பட்டது. 'புஜ்ஜாய்'க்கு நன்றி. வீரம் செறிந்த 'திரில்லிங்' கதை.

சூளீஸ்வரன்பட்டி கு. வைகுண்டராமன்

● கல்கியின் இரண்டு பொன்னான பக்கங்களை வீணடித்து வந்த புஜ்ஜாயின் 'ஒற்றன் 4×1' சித்திரக் கதையை இத்தோடு முடித்தமைக்கு வாசகர்களின் சார்பில் நன்றி செலுத்துகிறேன்.

வேலாயுதம்பாளையம் எம். சம்பத்

● உமது கார்ட்டூனுக்குப் பயங்கர பதிலடி கொடுக்கும்விதத்தில் இ.காங்கிரஸ் தாலிக்குத் தங்கமும் கொடுக்கும்; வடமாநிலங்களில் வறட்சியைப் போக்கும்; தமிழகத்தில் இரட்டை இலையை ஆடு என்கிற கலைஞர் கடிக்கத்தான் போகிறார். அதை நீங்கள் பரிதாபத்துடன் பார்த்துக் கொண்டு இருப்பதைக் கண்டு நாங்கள் கைகொட்டிச் சிரிக்கும் காலம் மிக அருகில்தான் இருக்கிறது.

வேலூர். கவிப்பிரியா

● தமிழகத்தில் நல்லாட்சி மலர்ந்து இரண்டு இலைகள் துளிர்ப்பதற்குள், தோட்டக்காரன் மேலிருந்த சொந்த வெறுப்புக்காகச் செடியை அழிக்கப் பார்க்கும் வீட்டுக்காரரும் பிறவியிலேயே இலைகளைத் தின்னும் ஆடும் கூட்டுச் சேர்ந்த கதைதான் தி.மு.க. – இ. காங். கூட்டு. வீட்டுக்காரர் மனம் மாறும். ஆனால் ஆட்டின் குணம் மாறாது. வேலியைத் தாண்டாமல், வெள்ளாட்டின் வாலை ஒட்ட நறுக்க வேண்டியதன் அவசியத்தைச் சிறிய கார்ட்டூன் மூலம் கல்கி விளக்கி உள்ளது.

சென்னை–28 லா.ரா. சுந்தரராஜன்

● செய்திகள் வாசித்த செம்பியன் ''வரிப் பணமெல்லாம் அரசு ஊழியர்களுக்குச் சம்பளமும், இதர சலுகைகளும் வழங்கவே சரியாகி விடுகிறது'' என்று குறிப்பிட்டுள்ளார். இந்தப் பலன்களை அடையும் எட்டு லட்சம் பேரில் மூன்று லட்சத்துக்கும் குறைவானவர்களே அரசு ஊழியர்கள். அதுவும் அமைச்சர்கள், அதிகாரிகள் உட்பட. தனியார் நிருவாகத்திலுள்ள ஏராளமான பள்ளிகள், கல்லூரிகளில் பணியாற்றும் ஆசிரியர்கள், மற்றும் பணியாளர்கள், பஞ்சாயத்து யூனியன்கள், நகரசபைகள் போன்ற உள்ளாட்சி ஊழியர்கள் அனைவரும்தான் இதில் அடங்குகின்றனர். எனவே ''அரசு ஊழியர்கள்'' என்பதை விட ''பொது நிருவாகச் செலவு'' என்று குறிப்பிடுவதே சரி.

சென்னை–33 இ.சு. பாலசுப்பிரமணியன்

● நம் நாட்டிலேயே பிரம்மாவுக்கு ராஜஸ்தானில் ''புஷ்கரில்'' தான் கோயில் உள்ளது என்று துணுக்கில் குறிப்பிடப்பட்டுள்ளது. தமிழ் நாட்டிலேயே திருச்சிக்கு அருகில் பிக்ஷாண்டார் கோயிலிலும் கரூருக்கு அருகில் உள்ள திருப்பாண்டிக் கொடுமுடியிலும் பிரும்மா குடிகொண்டுள்ளார்.

திண்டுக்கல்-7 எஸ். வி. ராமன்

● சுசீந்திரம் கோயிலில் பிரும்மாவும் குடிகொண்டுள்ளார். அக்கோயில் மூலவருக்குத் தாணுமாலையன் என்றே பெயர். தாணு: சிவன்; மால்: விஷ்ணு. அயன்: பிரும்மா. மூன்று தனித்தனிச்சந்நிதி, வாகனம் எல்லாம் இருக்கிறது. மும்மூர்த்தி க்ஷேத்திரம்.

சென்னை–17 பரந்தாமன்

● ஒரு கம்பெனியில் வேலை பார்க்கும் ஸ்டெனோவுக்கு, அதுவும் மானேஜருடன் நெருங்கிப் பழகும் ஸ்டெனோவுக்கு அவருடைய அப்பாதான் ''எம்.டி.'' என்று தெரியாமலா இருக்கும்? 'கோணங்கள் மாறுகின்றன' கதையின் ஆசிரியர், 'கல்கி' வாசகர்கள் காதில் பூ வைத்தவர்கள் என்று நினைத்து விட்டாரா!

சென்னை–18 ''மதுரை மணியன்''

● ஸ்டெனோ புவனாவுக்கு எதிரில் தந்தையும் மகனும் ஆடும் நாடகத்தை மிகவும் அழகாக எழுத்தில் வடித்திருக்கும் ஜெயவண்ணன் முடிவையும் பிரமாதமாகவே சற்றும் எதிர்பாராத விதத்தில் மாற்றி இருக்கிறார்.

சென்னை எஸ். வி. ராஜசேகர்

● குறிஞ்சிச் செல்வனின் ''கறையான்கள்'' சிறுகதை பம்பாயில் நடந்த நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்ட ஒரு கீழ்த்தரமான கற்பனை.

திருச்சி–14 எஸ். ராமமூர்த்தி

● குறிஞ்சிச் செல்வனின் ''கறையான்கள்'' சிறுகதை பத்திரிகைச் செய்தியின் படப்பிடிப்பு. சில மாற்றங்களுடன் சிறப்பாக எழுதியிருக்கிறார். ''நாயுடு'' போன்ற பெண் மோகம் கொண்டவர்களுக்குச் சவுக்கடி.

சாரதிதாசன்

**1918**ல் உலக யுத்தம் முடிந்தபோது வெற்றி பெற்ற நாடுகளின் பக்கம் இருந்தது இத்தாலி. வெற்றிப் பரிசாக அதற்கு அது வரை ஆஸ்திரியாவின் ஒரு பகுதியாக இருந்த தெற்கு டைரால் வழங்கப்பட்டது. ஜெர்மனியைத் தாய்மொழியாகக் கொண்ட 200,000 மக்கள் — கலாசாரத்தில் முற்றிலும் மாறுபட்டவர்கள் — அவர்களிடம் ஒரு வார்த்தை சம்மதம் பெறாமல் 50 மிலியன் இதாலியர்களுடன் இணைக்கப்பட்டனர். விளைவு: தெற்கு டைரால் பிரச்னை தோன்றியது. அடுத்த 50 ஆண்டுகளில் இத்தாலியர்கள் மேன்மேலும் தெற்கு டைராலில் குடியேறினர். டைரால் என்ற பெயரே மாற்றப்பட்டது. பெயர் மாறியதுடன் கலாசாரமும், மொழியும் சரித்திரமும் மாறி விடுமா என்ன? தெற்கு டைரால் மக்களுக்கும் புதிதாகக் குடியேறிய இதாலியருக்குமிடையே சதா சச்சரவுகள், சண்டைகள் இருந்து கொண்டே இருந்தன. அவ்வப்போது நாட்டுக் குண்டுகள் வெடிக்கும்; கட்டிடங்கள் தீப்பற்றி எரியும்; ரகளைகள் நிகழும்; பயமுறுத்தல்கள் இருக்கும். இப்படியே பல ஆண்டுகள் சென்றன. திடுமென்று 1969ல் நிலைமை மாறியது. ''குண்டு வீச்சு'', ''அடிதடி சண்டை'' என்றே கூறிவந்த பத்திரிகைகள், ''ஒப்பந்தம்'', ''ஒப்புரவு'' என்றெல்லாம் தலைப்புக்கள் பிரசுரிக்க ஆரம்பித்தன!

எப்படி இந்த மாயா ஜால மாற்றம் நிகழ்ந்தது? எம். ஆர். ஏ. என்றசர்வதேச அமைப்பின் சார்பில் ராஜ்மோகனும் அவரது நண்பர்கள் சிலரும் வந்து மக்களிடமும் தலைவர்களிடம் பேசியதுதான் காரணம்.

ரோமில் இத்தாலியத் தலைவர்கள், ''எங்கள் தரப்பில் பல தவறுகள் நிகழ்ந்துள்ளன. சீக்கிரமே பிரச்னைகளுக்குத் தீர்வு காண உழைக்கப் போகிறோம்'' என்றனர். சுமுகமான சூழ்நிலை உருவாகி ஒரு தீர்மானத்துக்கு வந்தனர். சில வாரங்களுக்குள் ஒப்பந்தம் கையெழுத்தாகி, ஆஸ்திரியா, இத்தாலி ஆகிய இரு அரசுகளும் அங்கீகரித்தன. இரு தேசத்து அயல் விவகார மந்திரிகளும் ''ஆக்க பூர்வமான ஒத்துழைப்புடன் கூடிய ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பமாகியுள்ளது'' என்று கூட்டு அறிக்கை விட்டனர்.

வேறு ஒருவராக இருந்திருந்தால் இந்த மாபெரும் வெற்றிக்குப் பிறகு ''சமாதானச் சிற்பி'' என்றும் ''அமைதிக் காவலர்'' என்றும் பட்டங்கள் சூட்டிக் கொண்டு பத்திரிகைகள் மூலம் பிராபல்யம் பெறவும் முயன்றிருப்பார். ஆனால் ராஜ்மோகனும் அவரது எம். ஆர். ஏ. தோழர்களும் 'அடுத்த அமைதிப் பணி எங்கே?' என்று அடக்கத்துடன் தேடிச் சென்றனர்.

எத்தனையோ ஆண்டுகளாகத் தீர்க்கப்படாமல் இருந்த தென் டைரால் பிரச்னைக்கு எப்படி ஒரு நல்ல முடிவு ஏற்பட்டது? பிரஞ்சு நாடாளு மன்ற உறுப்பினர் ஒருவரின் வார்த்தைகள் இதற்குப் பதிலளிக்கின்றன. எம். ஆர். ஏ. பற்றி அவர் குறிப்பிடுகையில் ''எல்லாரும் பிரச்னைகள் பற்றியே பேசுகிறார்கள். நீங்கள் அவற்றுக்குத் தீர்வு காண்பது பற்றிப் பேசுகிறீர்கள். இதுதான் வித்தியாசம்'' என்றார்.



✖ திரு தேவதாஸ் காந்தியும், அவர் மகன் ராஜ்மோகன் காந்தியும். இங்கிலாந்து வீட்லி என்ற இடத்தில் 1956ம் ஆண்டு எடுத்த படம்.

தீர்வு காண என்ன வழி வைத்திருக்கிறது எம். ஆர். ஏ.? எல்லாரும் பிரச்னைகளின் தீர்வுக்கு அறிவுக்கு வேலை கொடுப்பார்கள். எம். ஆர். ஏ. மனச்சாட்சிக்கு வேலை கொடுக்குமாறு கோருகிறது. இறையுணர்வு, நல்லொழுக்கம், அன்பு இவற்றைக் கடைப்பிடிக்குமாறு வேண்டுகிறது.

மாரல் ரீ ஆர்மமெண்ட் (Moral rearmament.) என்பதே சுருக்கமாக எம். ஆர். ஏ. ஆயிற்று. எல்லா தேசங்களும் யுத்த தளவாடங்களைப் புதுப்பித்துக் கொள்வதற்குப் பதிலாக தார்மீக பலத்தை அதிகரித்துக் கொள்வோம் என்கிறது எம். ஆர். ஏ. அதனாலேயே இந்தப் பெயர்.

''வழி காட்டுமாறு இறைவனை வேண்டுவோம். இறைவன் நாம் என்ன செய்ய

# ராஜ்மோகன்

வேண்டும் என்று விரும்புவாரோ அதைச் செய்வோம்'' என்கிறார் எம். ஆர். ஏ. தலைவர் ராஜ்மோகன்.

இப்படி அவர் பேசுவதைப் பார்த்தால் அவர் ஏதோ கிழட்டுச் சாமியாரோ அல்லது துறவியோ என்று தோன்றும். ஆனால் ராஜ்மோகனுக்கு இன்று வயது 44தான். காரியம் யாவினும் கைகொடுக்கும் அன்பான மனைவி, மழலை மாறாத குழந்தை.

ஒரு பெரிய மனிதருக்குப் பிள்ளையாகப் பிறந்துவிட்டு நல்ல பெயரெடுப்பதென்பதே ரொம்பக் கஷ்டம். ஏனெனில் தந்தையின் ஜாஜ்வல்யத்தில் மகனுடைய ஒளி மங்கித் தான் தோன்றும். ராஜ்மோகனோ ஒரு மேதைக்கும் ஒரு மகாத்மாவுக்கும் (ராஜாஜி—காந்திஜி) பேரனாகப்பிறந்தவர். ஒரு மாபெரும் பத்திரிகையாளரின் (தேவதாஸ் காந்தி) மகனாக உதித்தவர். அவரிடம் மக்களின் எதிர்பார்ப்புகளும் மிகுதியாகவே இருக்கும். அந்த எதிர்பார்ப்புகள் அளவுக்கு ராஜ்மோன் உயரவே செய்கிறார். ஆனால் அதை அவர் பிராபல்யப்படுத்திக்கொள்வதில்லை.

தென் டைராலில் மட்டுமல்ல; எம்.ஆர். ஏ.யின் அமைதிப் பணி உலகின் பல பாகங்களில் நடந்திருக்கிறது. இந்தியாவிலும் வெற்றி கண்டிருக்கிறது. கல்கத்தாவில் நிர்வாகம் — தொழிற் சங்கம் தகராறு காரணமாக இரு ஆண்டுகளாக மூடப் பட்டிருந்த ஒரு தொழிலகம் மறுபடி திறக்கப்பட்டது; 3,500 பேர் வேலைகளைத் திரும்பப் பெற்றனர். கிராமங்களுக்கிடையே இருந்த பரம்பரைப் பூசல்கள் தீர்த்து வைக்கப்பட்டுள்ளன. ஹரிஜனங்களுக்குப் புனர் வாழ்வு கிடைத்துள்ளது. முதலாளிகள் பலரது மனப்பான்மை அடியோடு மாற, கம்யூனிஸ்டுகள் தங்கள் சித்தாந்தங்களையும் மாற்றிக் கொள்ள வேண்டுமோ என்ற நிலைக்குத் தள்ளப் பட்டிருக்கின்றனர்.

இப்படி நூற்றுக் கணக்கான சிறிதும் பெரிதுமான நற்பணிகளை உலகம் முழுவதிலும் ராஜ்மோகன் தமது எம். ஆர். ஏ. சகாக்களுடன் நடத்தி யிருக்கிறார்.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

''எங்கப்பா சிகரெட் பிடிப்பதென்றால் வெண்கொற்றக் கொடைக்குக் கீழ் உட்கார்ந்து கொண்டு தான் பிடிப்பார்.''

''ஏன்?''

''அவர் பிடிப்பது கிங் சைஸ் சிகரெட்டுகள்!''

- செல்வ பாண்டியன்

ராஜாஜி யாரையும் எளிதில் பாராட்டி விடமாட்டார் என்பது எல்லோருக்கும் தெரியும். அதுவும் தமக்கு ரொம்ப நெருங்கியவர்கள், தமது குடும்பத்தினர் என்றால் ரொம்ப ரொம்பக் குறைவாகவே அவர்களைப் பற்றிப் பேசுவார். அப்படிப்பட்டவரே ஒருமுறை கோபாலகிருஷ்ண காந்திக்கு (ராஜ்மோகனின் தம்பி) எழுதும்போது, ''மோகன், சதா இறைவனைத் தன் உள்ளத்திலே கொண்டுள்ளஒரு சர்வதேச அரசியல் வாதி'' என்று வர்ணித்தார்.

'வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி' என்ற பழமொழி இதற்கன்றி வேறு எதற்கு அதிகமாகப் பொருந்தப் போகிறது? எம். ஆர். ஏ.யின் நற்பணிகளை வாழ்த்தி சுயராஜ்யாவிலும் எழுதியிருக்கிறார் ராஜாஜி.

எம். ஆர். ஏ. தொண்டராக (தலைவராக என்று குறிப்பிடுவதை விடத் தொண்டராக என்று குறிப்பிடுவதையே ராஜ்மோகன் விரும்புவார்) இருப்பதுடன் ராஜ்மோகன் ஹிம்மத் பத்திரிகையின் ஆசிரியராகவும் விளங்குகிறார். அச்சமின்றி சத்தியத்தைச் சுவைபட எழுதும் இளைஞர் பத்திரிகையாக அது வெற்றி நடை போட்டு வருகிறது.

'இத்தனை புத்திசாலியான ஒருவர் எதற்காக அண்மையில் நாடாளு மன்றத் தேர்தலில் நின்று தோற்றார்? பண பலமே தேர்தலில் பிரதானம்; வேட்பாளர்களின் தகுதிகளல்ல என்று இன்றைக்குள்ள சூழலில் தோல்விதான் தமக்குக் கிட்டும் என்பது அவருக்குத் தெரியாதா?' என்று கேட்கலாம். இதற்கு, 'அவர் இதயத்தினுள்ளே தெய்வத்தின் குரல் அவரை வற்புறுத்தியதால் நின்றார்' என்றுதான் பதில் கூற வேண்டும். 'தேசம் இன்றுள்ள சூழலில் இளைஞர்கள், படித்தவர்கள், மனச்சாட்சிக்கு அஞ்சுகிறவர்கள், அரசியலை மட்டுமே தொழிலாகக் கொள்ளாதவர்கள் அதிகமாக அரசியலில் நேரடியாக ஈடுபட முன்வர வேண்டும்; அப்படிச் செய்தால்தான் நாட்டு நடப்பில் ஓர் ஆரோக்கியமான மாறுதல் ஏற்படும்' என்று அவர் நம்பியதன் வெளிப்பாடுதான் அவர் தேர்தலில் நின்றது என்று கொள்ளலாம். நாளைக்கு இளைஞர் சமுதாயம் அடையப் போகும் வெற்றிக்கு இன்று அவரது தோல்வியை அடிக்கல்லாகக் கொள்ளலாம்.

முன்பொரு சந்தர்ப்பத்தில் அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, ''தமிழ் சஞ்சிகைகள் உலகம் எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார். ''அருமையான இலக்கியப் படைப்புக்கள் பிரசுரமாகின்றன. ஆயின் யதார்த்தம் — புத்தலை என்ற போர்வையில் செக்ஸுக்கு முக்கியத்துவம் தரும் கதைகளும் மலிந்துவிட்டன'' என்றேன்.

''யதார்த்தமும் புத்தலையும் சாக்கடையில் மட்டும்தான் இருக்கிறது என்று எண்ணுவதே அடிப்படையில் தவறு. மிக உன்னதமான உயர்ந்த காரியங்களும் நம்மைச் சுற்றி எவ்வளவோ நடக்கின்றன. அவையும் யதார்த்தம், புத்தலை என்பனவற்றுள் அடக்கம்தான்'' என்றார்.

உண்மைதானே? 'சாக்கடை நாறுகிறது நாறுகிறது' என்று சொல்லிக் கொண்டே

விருந்தால் போதுமா? அதைச் சுத்தப்படுத்த நடவடிக்கைகளும் மேற்கொள்ள வேண்டு மல்லவா?

இலக்கியத்தைப் பற்றி ராஜாஜிக்குத் திட்ட வட்டமான அபிப்பிராயம் உண்டு. ''ஒரு புத்தகம் அல்லது சஞ்சிகை திரும்பப் பெற முடியாத சில மணி நேரங்களை உன்னிட மிருந்து அபகரித்துக் கொண்டு விடுகின்றது; பதிலுக்கு அது உனக்கு ஏதாவது நன்மை செய்திருக்கிறதா என்று பார்க்க வேண்டும்'' என்பார். ''வாழ்க்கை வரலாறுகள் பல, நாவல்களாகி விடுகின்றன; அதனால் எனக்கு அவற்றில் நம்பிக்கை இல்லை'' என்றும் கூறி யுள்ளார்.

ராஜாஜியின் இந்தக் கருத்தை இந்த நூலை ராஜ்மோகன் எழுதும்போது சதா நினைவில் வைத்துக் கொண்டிருந்திருக்கிறார் என்று எனக்குத் தோன்றுகிறது. அதனால் சம்பவங்களை யொட்டி தமது உள்ளத்தில் எழும் அபிப்பிராயங்கள், உணர்ச்சிகள் அனைத்தையும் மூட்டை கட்டி வைத்துவிட்டு நிகழ்ச்சிகளை மட்டும் நடந்தது நடந்தபடி கூறுவதுடன் நிறுத்திக் கொண்டிருக்கிறார். அவற்றிலிருந்து வாசகர்கள் தாமே அபிப்பி ராயங்களை உருவாக்கிக் கொள்ளவும் முடி வுக்கு வரவும் உணர்ச்சிகளை அனுபவிக்கவும் வேண்டியிருக்கிறது. மற்றொன்று: ''இந்த வரலாற்றினை எழுதும் நாம் வரலாற்று நாயகனின் பேரன்'' என்ற எண்ணமும் சதா ராஜ்மோகனின் இதயத்தில் இருந்து வந்திருக்க வேண்டும். ''தாத்தாவைப் பற்றி பேரன் ஓகோ என்று எழுதுவதில் வியப் பென்ன?'' என்று யாரும் கூறிவிடக் கூடாது என்பதால் சர்வ ஜாக்கிரதையாக பேனாவை ஓட்டியிருக்கிறார். இவ்வளவிருந்தும் ராஜா ஜியின் ஆற்றலை அவரால் குறைத்துக் கூறி விட முடியவில்லை. சத்தியம் பிறழாமல், சம்பவங்களைக் கூறியிருப்பதே போதும், தலைவருடைய அந்தரங்க சுத்தமும் மேதா விலாசமும், கடமை உணர்வும் தன்னால் பிரகாசிக்கின்றன பக்கத்துக்குப் பக்கம்.

இந்த நூல் உங்களுக்குத் திருப்தி அளித்த தாயின் அதற்குக் காரணம் ராஜ்மோகனின் எழுத்தாற்றலே. குறைகள் ஏதும் கண்டால் அது மொழிபெயர்ப்பாளனின் தவறே.

தமிழாக்கப் பணியில் ஈடுபட்டிருந்த போது எனக்கு ஏற்பட்ட மன நிறைவுக்கும் அதிகமாக எனக்குப்பெரு மகிழ்ச்சியும் திருப்தி யும் அளிக்கக்கூடிய விஷயம் ஒன்றுண்டு. அதுதான் இந்த வாழ்க்கை வரலாற்றின் இரண்டாம் பாகத்தையும் தமிழாக்கம் செய்கிற நல்வாய்ப்பு. ஆவலுடன் அதனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

சென்னை-34

21—4—80 இ. ராஜேந்திரன்

[ராஜாஜி வாழ்க்கை வரலாறு நூலின் தொடக்கத்தில் இடம்பெற்றுள்ள மொழி பெயர்ப்பாளரின் கட்டுரை. பிரசுரம்: பாரதி பதிப்பகம்,உஸ்மான் ரோடு, சென்னை-17. விலை ரூ. 25.]

## நட்சத்திர வடிவம் பரிசுத் திட்டம்-2 போட்டி முடிவு

பதினொரு துண்டங்கள் கிடைக்கப்பெற்று கமலஹாசனின் முழு உருவத்தையும் கண்டு சரியானபடி ஒட்டி அனுப்பியவர்கள் நான்கு பேர். (1) திருமதி இந்திரா காமத், மே.பா. கே. பி. காமத், கார்பொரேஷன் பாங்க், எம். ஜி. ரோட், கோலார் 563.101; (2) கே. எஸ். ஹரி ஹர கிருஷ்ணன், 25/60, வடக்கன்தாரா, பாலக்காடு. 678012; (3) மா. தெய்வசிகாமணி, பாண்டி ரோடு, வழுதாவூர், 605502; (4) என். பிரதீபா, 7, தெற்கு தேர் வீதி, விருதுநகர்.

இவர்களுக்குத் தலா ரூ. 25 பரிசும், கமல ஹாசனின் கையெழுத்துடோடு கூடிய புகைப் படமும் அனுப்பி வைக்கப்படும்.

இந்த இரண்டாவது போட்டியில் மிஞ்சிய ரூ. 150ம் ஜாக்பாட்டில் சேருகிறது! 10 போட்டிகளுக்குப் பிறகு 11வது இறுதிப் போட்டியில் இவ்வாறு சேருகிற தொகைகள் ஒட்டுமொத்தமான ஜாக்பாட் பரிசுத் தொகையாக விளங்கும். அது, அந்த 11வது போட்டியில் வெற்றி பெறும் வாசகர் களுக்குச் சமமாகப் பகிர்ந்தளிக்கப்படும்! இப்போட்டிகளில் மிஞ்சுகிற நட்சத்திரப் புகைப்படங்களும் ஜாக்பாட் பரிசைப் பகிர்ந்து கொள்வோருக்கு அனுப்பி வைக்கப் படும்!

ஜாக்பாட்டில் இதுவரை சேர்ந்துள்ள தொகை ரூ. 275!

ஆசிரியர், கல்கி

புகைப்படம்: ஏ. சுந்தரம்

ஜெயப்பிரகாஷ் நினைவு இல்லத்திற்கு சஞ்சய் விஜயம் செய்தார்! – செய்தி














1980 ஜூன் 8
ரௌத்திரி வைகாசி 26
மலர்: 38 இதழ்: 45



# கல்கி



தமிழ்த் திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

## வாக்காளரின் வெற்றி!

அரசியல் பண்டிதர்கள், ஜோஸ்யர்கள், அபிப்பிராய வாக்கெடுப்பாளர்கள் ஆகிய அனைவரது ஹேஷ்யங்களையும் பொய்யாக்கி விட்டு எம். ஜி. ஆரின் அ. இ. அ. தி. மு. க மகத்தான வெற்றி பெற்றிருக்கிறது.

கூட்டணியைச் சேர்ந்தவர்களும், பிரதான கட்சியின் தளபதிகளும், எம். ஜி. ஆரின் நெருங்கிய நண்பர்களும் ஏன், எம். ஜி. ஆரே கூட இவ்வளவு மகத்தான வெற்றியை எதிர்பார்த்திருக்க மாட்டார்கள், நிச்சயம்.

தேர்தல் முடிவு தமிழக மக்களின் அறிவு முதிர்ச்சியையே காட்டுகிறது. இது வாக்காளரின் வெற்றி. மத்திய நாடாளுமன்ற தேர்தல் வேறு மாநில சட்ட சபைத் தேர்தல் வேறு என்பதை நன்ருகப் புரிந்துகொண்டு வாக்களித்திருக்கிருர்கள். அரசியல் பண்டிதர்கள்தாம் வாக்காளரைப் பற்றிய தமது கணிப்பில் தவறிழைத்தார்கள்.

நாடாளுமன்ற தேர்தலில் அவர்கள் அளித்த வாக்கு இந்திரா — கருணாநிதி ஆதரவு வாக்கல்ல; செயல் திறனற்ற உட்பூசல் மிகுந்த ஜனதாவுக்கு எதிரான வாக்கு என்பது நிரூபணமாகி விட்டது. இன்று அதே மக்கள் சர்வாதிகாரத்துக்கு அடிபணிய மாட்டோம்; லஞ்ச ஊழலுக்கு கமிஷன் தீர்ப்பு பெற்ருேருக்கு மறுபடி பட்டா வழங்கமாட்டோம் என்று உறுதியாக நின்றிருக்கிருர்கள்.

பாமரமக்கள் என்று சாதாரணமாக எண்ணப் படுகிறவர்கள் அப்படியொன்றும் விஷய ஞானமே இல்லாதவர்கள் அல்ல என்று மற்றுமொரு முறை நிரூபணமாகியுள்ளது.

இந்தத் தேர்தலில் அனைத்திலும் பெரிய சாதனை திரு ஹண்டேயின் எழுநூறு வோட்டு வித்தியாசத் தோல்விதான். ஒரு கட்டத்தில் 1600 வோட்டு வித்தியாசத்தில் ஹண்டே வென்று கொண்டிருக்கிருர் என்றே செய்திகள் வந்தன. கலைஞருக்கு இது வெற்றியே அல்ல.

தேர்தல் முடிவு குறித்து எம். ஜி. ஆரின் அறிக்கை அடக்கமும் விவேகமும் மிக்கதாக உள்ளது. 'நமது வெற்றி மக்கள் கொடுத்த ஒன்று என்பதை மறவாதிருப்போம். மாநிலம், படிப்படியாக நிச்சயமான முன்னேற்றம் காண உழைப்போம். அறிஞர்களின் ஆலோசனைகளைக் கோரிப் பெறுவோம்' என்று சொல்லியிருக்கிருர்.

குறள் கூறுகிறபடி, நடத்துகிற ஆலோசனைகளை அவர் ஒரு காரியத்தை ஆரம்பிப்பதற்கு முன்பே நடத்திவிட வேண்டும். எடுத்த முடிவில் உறுதியாக நிற்க வேண்டும். இன்று ஒரு சட்டம் இயற்றுவதும் நாளை அதை வாபஸ் பெறுவதும் அதிகாரத்தில் உள்ளோருக்கு அழகல்ல. அதிகாரங்களைத் தம்மிடமே குவித்துக் கொள்ளாமல் பரவலாக்கி, சாதனைகளுக்குக் கால இலக்குகளை நிர்ணயித்து, சுருசுருப்பு ஊட்டித் தட்டிக் கேட்கவேண்டும். அதிகாரிகளும், அமைச்சர்களும், அறிஞர்களும் மற்றவர்களும் அணுகுவதற்கு அவர் எளியராய் விளங்க வேண்டும்.

மூதறிஞர் ராஜாஜி கூறுவார், 'அதிகாரத்தில் அமர்கிறவர் பேரறிவாளனாக விளங்குவதை விட நல்லொழுக்கம் மிக்கவராய் விளங்குவதுதான் முக்கியம். ஆற்றலை விலை கொடுத்து வாங்கிக் கொள்ளலாம்; ஆனால் நேர்மைக்கு விலை பேச முடியாது' என்று.

புரட்சித் தலைவர் மாசு மருவற்றவர் என்ற மக்களின் நம்பிக்கைக்குத் தொடர்ந்து பாத்திரராக இருந்து வரவும் தமக்குத் தரப்படும் யோசனைகளில் மாநிலத்துக்கு நன்மை பயப்பவை எவை, ஒதுக்கப்பட வேண்டியவை எவை என்

பதைப் பகுத்தறியும் விவேகமும் மிக்கவராக விளங்கவும் வாழ்த்துகிறோம். தமிழகத்தின் ஒளிமயமான எதிர்காலத்துக்குப் பிரார்த்திக்கிறோம்.

* * *

அனைத்திந்திய ரீதியில் சட்டசபைத் தேர்தல் முடிவுகள் கவலைக்கு இடம் தருகின்றன. தமிழகத்தில் போல, வேறுசக்தி வாய்ந்த மாற்றுக் கட்சியும் அதனை மையமாகக் கொண்ட கூட்டணியும் இல்லாத நிலையில் இந்திரா காங்கிரஸ் பல சட்டமன்றங்களில் பெரும்பான்மை பெற்றதில் வியப்பில்லை. இதனால் ராஜ்ய சபையிலும் மூன்றிலிரு பங்கு பெரும்பான்மையை வெகு சீக்கிரமே பெற்று விடுவார் இந்திரா. சஞ்சய்யின் சர்வாதிகாரம் கொடி கட்டிப் பறக்கும்.

அதற்கு ஒரு மாற்று மருந்தாகத் தமிழக அ. இ. அ. தி. மு. க. ஆட்சி விளங்கவேண்டும். இந்திரா காங்கிரஸ் மறுபடி விரிக்கக் கூடிய வலையில் விழுந்து விடக் கூடாது. புரட்சித் தலைவருக்கு இன்று அனைத்திந்திய ரீதியில் ஜனநாயகப் பணி காத்திருக்கிறது.

# வாய்ப்பு

## கண்ணதாசன்

அயர்விலா உழைப்பும், மூற்ற
அரசியல் நெறியும் மிக்கான்;
மயலுறப் பெண்கள் கூடும்
மார்பகச் சிறப்பும் மிக்கான்;

நயமிகும் தொண்டி னாலே
நாட்டினை வாழ வைத்த
தயரதன் போல நல்ல
தந்தையும் வாய்க்க வேண்டும்!

மாகலை ஞானம் கல்வி
மறப்புகழ் அறத்தின் தேர்வு
ஓர்கணை உலகை வெல்லும்
உவமைஇல் லாத வீரம்

சீர்கொளத் தந்தை சொல்லை
சிரத்தினில் வைத்த வீரன்
இராகவன் போல வாழ்வில்
மைந்தரும் இருக்க வேண்டும்!

இலக்குவன் போலத் தம்பி
இலங்கையன் தம்பி மற்றும்
கலக்கமில் குகனைப் போன்று
கைதரும் தோழர் வாய்த்தால்

மலைக்கனம் தன்னைக் கூட
மடியினில் தூக்கிச் செல்வோம்:
இலக்கணம் போன்ற வாழ்வை
எய்தியே உயர்ந்து வாழ்வோம்!

வாழ்வது பெரிதே யல்ல
வாய்ப்பது வாய்த்தால் எந்தத்
தாழ்வுமில் லாமல் வாழ்வோம்
ஜானகி — ராமன் போல!

ஆழ்கடல் தன்னைக் கூட
அடக்கலாம் கைக ளாலே!
வாழ்வினை உதவ வேண்டும்
உலகமே கையில் நிற்கும்!



# வெப்பத்தால்
# நீங்கள் வலுவிழந்து
# வாடுகையில்



## உட்கொள்ளுங்கள் க்ளாக்ஸோஸ்-D*

**புத்துணர்ச்சி பெருகும். குளுமை பரவும். மேற்கொண்டு வேலையில் ஈடுபட உடனடி சக்தி கிடைக்கும்.**

வெப்பத்தைப் போல் உங்களை வலுவிழக்கச் செய்வது பிறிதொன்றில்லை. கோடையின் வெப்பத்திலே வடிந்துவிடும் உங்கள் சக்தியெல்லாம். உடனடி புத்துணர்ச்சி பெறத் தேவை க்ளாக்ஸோஸ்-D.

பழரசம், பால், தேநீர், காபி, நீர் ஆகியவற்றோடு க்ளாக்ஸோஸ்-D சேர்த்து அருந்துங்கள். அல்லது, நேரடியாகவே உட்கொள்ளுங்கள். உங்கள் குடும்பத்தினர் அனைவர்க்கும் கொடுங்கள் க்ளாக்ஸோஸ்-D. திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர். மேற்கொண்டு வேலையில் ஈடுபட உடனடி சக்தி—வேலையிலும், விளையாட்டிலும்.




GFP. 5041-TL

**க்ளாக்ஸோஸ்-D* —குடும்பத்தினர் அனைவர்க்கும் உடனடி சக்தி.**

உலகப் புகழ் பெற்ற ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் உணவுப்பொருள்கள்

## திடீர் புளியோதரை பேஸ்ட்




**ஆபீஸ் செல்வோருக்கும் யாத்ரீகர்களுக்கும் ஓர் வரப்பிரசாதம்**

வடித்த சாதத்துடன் சிறிதளவு பேஸ்டும் நல்லெண்ணை யும் கலந்தால் பெருமாள் கோவில் புளியோதரை தயார்! கோவில்களில் கிடைக்கும் பட்டை (வெள்ளை நிவேத்தியம்) சாதத்தையும் வாங்கி உபயோகிக்கலாம்

எமது அடுத்த இரு புதிய தயாரிப்புகள் :

o குலாப்ஜாமூன் மிக்ஸ்  o தக்காளி சாம்பார் பேஸ்ட்

# ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.,

ப. கெ. 46 — பு. கெ. 193, தம்புசெட்டி தெரு சென்னை - 600 001.

போன்: 20401 & 20402 தந்தி: "COCHUTNI" & "DHIDEEREX"

தயாரிப்பு முறையை உருவாக்கி, தர உயர்வை நிர்ணயிப்பவர்கள் :

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிடிக்கல் லாபரேட்டரீஸ்**

---



Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள் !** **மணமானவர்கள் !!**

வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி, தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ, இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்' ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'

## 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம் களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுத வும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

- ❋ குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்
- ❋ கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்

சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

தலைமை அலுவலகம் :

# சிவராஜ் சித்த வைத்தியசாலை

C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்

(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)

காந்தி ஸ்டேடியம் - சேலம்-636007



நமக்கென்று ஒதுக்கப்பட்ட ஒரு தனியார் விமானத்தில் 'ஜிவ்'வென்று பறந்து போய் பாட்னாவில் 'ஜம்' மென்று இறங்கினார் சஞ்சய் காந்தி. நேரே ஜே. பி. நினைவாலயம் சென்று வணங்கினார். நினைவாலயமாக மாறியுள்ள ஜே. பி. வசித்த இல்லத்தில் அவர் கடைசி மூச்சுப் பிரிந்த அறையைப் பார்வையிட்டார். அவ்வறையில் வைக்கப் பட்டுள்ள ஜே. பி. சிலைக்கு மாலை அணி வித்தார். அவர் நினைவாக உருவாகியுள்ள கண்காட்சியை வலம் வந்தார்!

'எல்லாம் தேர்தல் ஸ்டண்ட்!' என்று சிலர் எண்ணக் கூடும். எனக்கு அப்படித் தோன்றவில்லை. ''லோக நாயகா! நீ மட்டும் ஜனதாவை உருவாக்கியிராது போனால் அந்த அசடுகள் தங்களுக்குள் சண்டை யிட்டுக் கொண்டு கட்சியை உடைத்திருக்க மாட் டார்கள். மக்கள் 'இந்திராவே தேவலாம்' என்ற முடிவுக்கும் வந்திருக்க மாட்டார்கள். எனவே நான் மறுபடியும் அதிகாரத்துக்கு வர அடிப்படையில் நீங்களே காரணம்! உங்களை நன்றியோடு நமஸ்கரிக்கிறேன்!'' என்று மனப்பூர்வமாகவே அஞ்சலி செலுத்தி யிருக்கலாம் சஞ்சய்.

● ● ●

ஜூன் 18ம் தேதி மத்திய பட்ஜெட் சமர்ப்பிக்கப்படும். ஆர். வி. இதுவரை பேசி வந்துள்ளவை யெல்லாம் நம்பிக்கை அளிப்பவையாக உள்ளன. ஆனால் அதை வைத்துக் கொண்டு பட்ஜெட் பற்றி இப் போதே ஒரு முடிவுக்கு வந்து நாம் மகிழ்ந்து விட முடியாது. ஓர் அரசு ஆணையில் ஒன்பது மாநில அரசுகளை டிஸ்மிஸ் செய்தவர், மற்றொரு அரசு ஆணையால் ஆறு பாங்கு களை அரசுடைமையாக்கியவர் ஆட்சியில் நிதி அமைச்சர் எந்த அளவுக்குச் சுதந்திர மாக இயங்க முடியுமோ? 'எதற்கும் தயா ராக இருக்க வேண்டியதுதான்' என உணர்த் துவதே போல் கல்கி வாசக அன்பர் பிரியா பாலு ஒரு குட்டிக் கதை அனுப்பியுள்ளார்:

ஒரு கொடுங்கோல் அரசன் இருந்தான். மரணம் நெருங்கியபோது மகனை அழைத் தான். ''மகனே! மக்களை இம்சித்தேன். வரியை அரிசியாகவே இடித்துப் புடைத்துக் கொடுத்தார்கள். இப்போது வருந்துகிறேன். நல்லாட்சி புரிந்து எனக்கு நல்ல பெயர் வாங்கித் தரவேண்டும் நீ'' என்று புலம்பிய வாறு இறந்தான்.

மறுநாள் முடிசூடிய மகன் போட்ட உத்தரவு: ''உமி எடைக்கும் இனி அரிசி யாகத் தரவேண்டும், வரியாக!''

''ஐய்யய்யோ! அப்பனே நல்லவன்'' என்று மக்கள் வாழ்த்தினார்கள்! இறந்தவ னின் ஆன்மா சாந்தி அடைந்தது!

''ஐயய்யோ! சரண் சிங்கே தேவலாம்'' என்று கூறும் நிலை நமக்கு ஏற்பட வேண் டாம்!

● ● ●

தூக்குத் தண்டனை உண்டு. அது அரசியல் சாசனத்துக்கு முரணானதல்ல என்று தீர்ப்பு வழங்கியுள்ளது சுப்ரீம் கோர்ட். ராஜாஜி யின் கருத்துடன் சுப்ரீம் கோர்ட் ஒத்துப் போயிருக்கிறது. 'தூக்குத் தண்டனை கிடைக்கலாம் என்ற அச்சமே பல கொலைகள் நடக்காமல் தடுத்துவிடும்; எனவே அந்தத் தண்டனை சட்டப் புத்தகத்திலிருந்தே ஆக வேண்டும்' என்று எழுதினார் ராஜாஜி.

'எவ்வளவுதான் கொடியோனாயினும் ஒரு வனது உயிரைப் பறிக்கச் சமூகத்துக்கு



உரிமை உண்டா?' என்ற வாதம் அர்த்த மற்றது. சகட்டு மேனிக்கு நமது நீதிபதிகள் தூக்குத் தண்டனை வழங்கி விடுவதில்லை. 20,000 கொலை வழக்குகளில் 50 வழக்கு களிலேயே தூக்குத் தண்டனை வழங்கப் பட்டுள்ளது என டி. ஆஞ்சநேயலு எடுத்துக் காட்டியிருக்கிறார். சந்தேகத்துக்கு இட மின்றி ஒருவன் திட்டமிட்டுக் கொலை செய் தான் என்று நிரூபணமானாலே அந்தத் தண்டனையை நீதிபதிகள் வழங்குவர்; அதன் பிறகும் அவன் மேல் கோர்ட்டுக்கோ அதற்கும் மேலே குடியரசுத் தலைவருக்கோ மனு சமர்ப்பிக்கலாம். பில்லா, ரங்கா ராமன் ராகவ் போன்று மனித உருவிலே வளையவரும் அரக்கர்களுக்குக் கருணை காட்டுவது கயமைக்குத் தாது புஷ்டி லேகி யம் வழங்குவது போலாகும்!

● ● ●

தூக்குத் தண்டனை ஒருபுறமிருக்க தற் கொலை விஷயம் ரொம்ப விசித்திரமானது. தற்கொலை செய்து கொள்வது குற்றம்! அம்முயற்சியில் ஈடுபடுவோருக்குத் தண்டனை கூட உண்டு! ஆனால் ஒருவன் அல்லது ஒருத்தி

# செய்திகள் வாசிப்பது, செம்பியன்

தற்கொலைக்கு விரட்டப்படுகிறார் என்றால் அப்படி விரட்டி அடிக்கிறவர் மீது யாரும் எந்த நடவடிக்கையும் எடுக்க முடிவதில்லை! சதா நச்சரிப்பதன் மூலம், பரிகசிப்பதன் மூலம், ஆற்றல்களை வெளிப்படுத்த முடியாமல் நசுக்குவதன் மூலம் ஏன், சதா அலட்சியப் படுத்துவதன் மூலமாகக் கூட ஒருவர் மற்றொருவரை மனக் கஷ்டத்துக்கு உள்ளாக்கித் தற்கொலைக்கு விரட்டி விடலாம். பார்க்கப் போனால் அதுவும் ஒரு வகைக் கொலை தானே!

● ● ●

முப்பத்தைந்து விஷப் பாம்புகளிடையே ஐம்பத்திரண்டு நாள் வாழ்ந்து காட்டியிருக்கிறார் தென் ஆப்பிரிக்கர் ஒருவர்.

பிரமிக்க வைக்கும் உலக சாதனைதான். ஆனால் சராசரி இந்தியன் தன் வாழ்நாள் முழுவதும் விலைவாசி உயர்வு, சுயநல அரசியல், எதேச்சாதிகாரம், ஊதாரித்தனம், திறமையற்ற நிர்வாகம், லஞ்ச ஊழல் ஆகிய கட்டு விரியன், கண்ணாடி விரியன், ராஜ நாகம், கார்கோடகன் போன்ற நச்சுப் பாம்புகள் கையையும் காலையும், கழுத்தையும் சுற்றிக் கொண்டிருக்க எப்படியோ காலத்தை ஓட்டக் கற்றுக் கொண்டிருக்கிறானே, அதை விடவா?

● ● ●

சிவாஜி தாக்குண்டது பற்றி எம்.ஜி.ஆர். பேசுகையில் ''விளக்கு அணைந்ததும் அவர் மீது இரும்பு 'நட்' தாக்கியதாகச் சிலர் கூறுகிறார்கள்; வேறு சிலர் அவர் இருட்டில் இரும்புக் கம்பத்தில் மோதிக்கொண்டதாகக் கூறுகிறார்கள்'' என்றாராம்!

இச்செய்தி உண்மையாயின் தேர்தல் என்பது எவ்வளவு அநாகரிக இழிநிலைக்குத் தலைவர்களை இழுத்துச் சென்று விடுகிறது என்பதையே உணர்த்துகிறது. தேர்தல் பிரசாரத்தை ஓர் உயர்ந்த நிலையில் நடத்த நம் தலைவர்கள் லாயக்கற்றவர்களாக இருக்கும்போது ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை வரவேண்டிய தேர்தல் அடிக்கடி வந்தால் கேட்கவா வேண்டும்? இதனால் மக்களுடைய மன ஆரோக்கியம் எவ்வளவு பாதிக்கப்படும்?

● ● ●

இதை உணர்ந்துதானோ என்னவோ 'கட்சி அரசியலே வேண்டாம்' என்று நேபாள மக்கள் வோட்டளித்து விட்டனர்! நேபாளத்தில் பஞ்சாயத்துத் தேர்தல்களில் கட்சி அரசியல் புக வேண்டாம் என்று அபிப்பிராய வாக்கெடுப்பில் மக்கள் தீர்ப்பு வழங்கியுள்ளனர்.

இன்னொரு அபிப்பிராய வாக்கெடுப்பு கியூபெக்கில் நடந்தது. கனடாவின் ஒரு மாநிலமான கியூபெக் பிரெஞ்சு பேசுவோரை அதிகம் கொண்டது. ஆயினும் அவர்கள் தாங்கள் தனி நாட்டவராகப் பிரிந்துபோக விரும்பவில்லை என்றே வோட்டளித்தனர்.

இவை மக்கள் தீர்ப்புமல்ல; சில சமயம் தவறிப்போகிற மகேசன் தீர்ப்பும் அல்ல. நன்மதியின் தீர்ப்பு!

---





# "பாவம், அப்பா அம்மா!"



பள்ளிக்கூடங்கள் திறக்கப்படும் மாதம் இது. இவ்விதழ் மேலட்டையில் காட்சி தரும் சிறுமி, ''பாவம், அப்பா அம்மா!'' என்று பெருமூச்சுடன் கூறிக் கன்னத்தில் கை வைத்துக் கொள்வதில் அதிசயமே இல்லை! பெற்றோர் படும் சில அவதிகளைக் கேளுங்கள்:

**சீருடை:**
**தி. நகர் ராஜு பிள்ளை தோட்டத்தில் வசிக்கும் பச்சையம்மாள்**

பள்ளிக்கூடங்களில் ஏழை, பணக்காரன் என்ற வித்தியாச மனப்பான்மை குழந்தைகளுக்கு ஏற்படக் கூடாது என்பதற்காக ஒரே மாதிரி சீருடை ஏற்படுத்தி இருக்கிறதாச் சொல்றாங்க. ஆனா எங்களை மாதிரி சராசரி மக்களுக்கு இது ரொம்பக் கஷ்டமாப் போவுது. பண்டிகையின்போது ஏதோ வருஷத்துக்கு இரண்டு ஜதை உடை தைச்சோம், காரியம் முடிஞ்சதுன்னு இல்லே. சில சமயம் உறவினர்கள், ரொம்ப வேண்டியவங்க வீட்டிலிருந்து அவங்க குழந்தைகளுக்குச் சின்னதாகப் போன ஆடைகள் எங்களுக்குக் கிடைப்பதும் உண்டு. ஆனா இந்த மாதிரி கலரிலே உடை வேணும்னு கேட்டா, அது முடியுமா? துணி வாங்கித் தைக்கத்தானே ஆகணும்? அந்த ஆடைகளைப் பள்ளிக்குப் போறச்சே மட்டும்தான் பிள்ளைகள் போட்டுக்கும். மற்ற நேரத்துக்கு வேறு உடை தேவை.

ஒரு யோசனை: பள்ளியிலே படிக்கிற வசதிப்பட்ட குழந்தைகள் அவங்களுக்குச் சின்னதாப் போன உடுப்பை, பள்ளிக்கே கொடுத்துட்டா, அதைப் பள்ளி, வசதியற்றவர்களுக்கு இலவசமாவோ குறைந்த விலைக்கோ விநியோகிக்கலாமே!

**போக்கு வரத்து:**
**ஆதம்பாக்கத்தில் வசிக்கும் சரஸ்வதி**

எங்களைப் போல் புறநகர் வாசிகள் குழந்தைகளைப் படிப்பிப்பது என்பது பகீரதப் பிரயத்தனம்தான். நல்ல பள்ளி வேண்டுமென்றால் நாங்களே பணம் போட்டு ஆரம்பித்தால்தான் உண்டு. இல்லையேல் நகரில் மிகவும் தள்ளி யிருக்கிற பள்ளிக்கு அனுப்ப வேண்டும். ஒரு நாளைப் போல், குழந்தைகளைக் கொண்டு விட முடியாது. ஜட்காவோ, சைக்கிள் ரிக்ஷாவோதான் ஏற்பாடு செய்ய வேண்டும். அவர்கள் அதில் புளி மூட்டை அடைக்கிற மாதிரி எவ்வளவு குழந்தைகளை அடைக்க முடியுமோ அடைக்கிறார்கள். இந்த அழகில் கார்ப்பரேஷன் அளிக்கும் சந்திர மண்டலத் தெருக்கள் வேறு. (அதிகமான குழிகள், பள்ளங்கள் கொண்ட தெருக்களைத்தான் சொல்கிறேன்) மாலையில் குழந்தைகள் திரும்பி வரும் வரை நெஞ்சம் நிம்மதி அடைவதில்லை.

**அட்மிஷன்:**
**காந்தி நகரில் வசிக்கும் கணேசன்**

ஒன்னுமில்லே, இந்த எல். கே. ஜி. இல் சேர்க்க எத்தனை பகீரதப் பிரயத்தனங்கள்! வோட்டுக் கேட்பது மாதிரி சிபாரிசுகள். தலைமை ஆசிரியரிடம் மன்றாடல்; சுவாமிக்கு வேண்டுதல்கள்! 'ஆறு மாதத்துக்கு முன்பே என்னமோ டெஸ்ட்' என்கிறார்கள். அதற்குப் பிறகு ரயில்வே மாதிரி வெயிட்டிங் லிஸ்ட்! குழந்தைக்கு ஒரு வருடம் வீணாகி விடக் கூடாதே என்கிற கவலையில், ''ஏதாவது டொனேஷன் வேண்டுமானால் தந்துவிடுகிறேன்'' என்று சொன்னால் போச்சு. 'அதெப்படி அந்த மாதிரி பேசலாம்' என்று வதைத்து விடுகிறார்கள். சொன்னாலும் தொலைந்தோம். சொல்லாவிட்டாலும் கெட்டோம். ''டொனேஷன் பெறாத நேர்மையாளர்கள்'' ஆயிரம் ரூபாய் வரை பணம் வாங்கிவிட்டு, 'இது டெபாஸிட் தொகை' என்று புதுப் பெயர் சூட்டுகிறார்கள். என் குழந்தைக்கு என்ன காஷியர் வேலையா தரப் போகிறார்கள்? சரி, படிப்பை முடித்துவிட்டுப் போகும்போது, இந்த டெபாஸிட்டைத் திருப்பித் தருவார்களா? பட்டை நாமம்தான். இந்த மொத்தப் பணம் தவிர மாதா மாதம் ரூ. 20 அல்லது 25. மேலும் ஸ்பெஷல் பீஸ் அது இது என்று ஒரு டேர்முக்குக் கிட்டத்தட்ட ரூ. 200 வாங்கி விடுகிறார்கள். குழந்தையின் எடைக்கு எடை பணம் கொடுக்க வேண்டிய காலம் வெகு தூரத்தில் இல்லை என்றே தோன்றுகிறது!

**புத்தகங்கள்:**
**நெய்வேலியில் வசிக்கும் எ. கோபு**

200 பக்கம் நோட் புக் விலை 1.80. உள்ள பக்கங்களோ 140 (அட்டையுடன்). இஷ்டத்துக்கு அட்டையில் பக்கங்களை அச்சடித்து விலையையும் கூட்டி விற்கிறார்கள். அரசாங்கம் நியமித்த விலையில் (பழைய விலை) நோட் புத்தகங்கள் கிடைப்பதே இல்லை. பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட விருக்கும் இச்சமயம் இதுபற்றி அரசு கொஞ்சம் கவனித்தால் பெற்றோர்களுக்குச் சற்று நிம்மதி கிடைக்கும்.

பேட்டி: சிக்கி

மேலட்டை வண்ணப் படம்: ஏ. சுந்தரம்



# சங்கீதா சமாதானம் அடையட்டும்!

"நீச்சல் கற்றுத்தர பெண் பயிற்சியாளர் யாருமில்லையே" என்று ஜூன் முதல் தேதி கல்கி இதழில் சங்கீதா குறைப்பட்டுக் கொண்டாரல்லவா? அது தவறு என்கிறார் நீச்சல் பயிற்சியாளர் ஸ்ரீ. ராமசாமி. ஹோட்டல் கன்னிமாராவில் ஒரு பெண் பயிற்சியாளர் இருப்பதைக் கூறுகிறார்.

இந்த நீச்சல் பயிற்சியாளர் பெயர் மிஸ் சமாதானம். காலை 9 மணியிலிருந்து 12 மணி வரை கன்னிமாராவில் சிறுவர் சிறுமியருக்கும் பெண்மணிகளுக்கும் நீச்சல் கற்றுத் தரும் மிஸ் சமாதானம் ஐ.ஐ.டி. காம்பஸில் உள்ள வனவாணி ஹையர் செகண்டரி பள்ளியில் உடற்பயிற்சி ஆசிரியை.

நீச்சல் பயிற்சி பெறுவது வேறு, நீச்சல் பயிற்சியாளராக விளங்கப் பயிற்சி பெறுவது வேறு. பல நீச்சல் பயிற்சியாளரைத் தோற்றுவித்திருக்கிறார் ஸ்ரீ. ராமசாமி. அவர்களில் மூவர் பெண்கள். மிஸ் சமாதானம் தவிர வாணியம்பாடி அரசு பெண்கள் கல்லூரி உடற் பயிற்சி ஆசிரியை கமலா, சேலம் சாரதா கல்லூரி உடற் பயிற்சி ஆசிரியை பானுமதி ஆகியோர் இவரிடம் பயின்று நற்சான்றிதழ் பெற்றவர்கள்.

செல்வந்தர்களுக்கு மட்டுமின்றி அனாதை இல்லங்களில் ஏழைக் குழந்தைகளுக்கும் அறிவு வளர்ச்சியுறாத குழந்தைகளுக்கும்கூட நீச்சல் கற்றுத் தந்து சேவை புரிகிறார் திரு.ஸ்ரீ. ராமசாமி.

—குண்டுமணி



✕ மிஸ். சமாதானம்

## கனவுக் கலைகள் (க்வாப்-ஹிந்தி)

உழைப்பாளி பிரதாப்புக்குப் பதவி உயர்வுக்கு மேல் பதவி உயர்வு! நீச்சல் மன்னன் பிரதாப் முதலாளியின் மகள் இந்திராணியின் காதலையும் நீந்திப் பெற்றுவிடுகிறான்! அப்புறம் என்ன? மகிழ்ச்சி வெள்ளத்தில் இந்தக் காதல் ஜோடி நீந்துகிறது!

இந்தக் காதல் ஜோடியைப் பிரித்துவைக்க, மது அரக்கன் விளையாடுகிறான். நீரில் நீந்திய பிரதாப் மதுவில் நீந்துகிறான். மது மயக்கத்தில் பிரதாப், தன் இனிய நண்பன் கோபாலின் தங்கை மாயாவைக் கெடுத்து விடுகிறான்! மாயா கருவுறுகிறாள். தன்னை பிரதாப் மணம் புரிவான் என்று நம்பிய மாயா அவன் இந்திராணியின் காதலில் சிக்கி யிருப்பதை உணர்கிறாள். ஒரு படகில் மர்மமான சூழலில் மரணமடைகிறாள். பிரதாப் மீது கொலைக் குற்றம் சுமத்தப் படுகிறது! பிறகு ஒரே வழக்கு மயம்! கோர்ட் வாதங்கள்: வக்கீல்கள் அசோக்குமார், உத்பால் தத்தின் சாகஸப் பேச்சுக்கள்! இறுதியில் பிரதாப்புக்கு விடுதலை! நமக்கும் தான்!

-பி. எஸ். எம்.



## புரட்சிகரமான வேலைநிறுத்தம்

ஜப்பானில் நடப்பது போல் திருச்சியிலும் 23—5—80 அன்று B.H.E.L.ல் பணிபுரியும் ஆயிரக்கணக்கானவர்களில் பெரும்பாலானோர் தங்களது ஊதிய மாற்றுக் கோரிக்கை நிறைவேறும் பொருட்டு சம்பளமின்றி ஒரு மணி நேரம் கூடுதலாக வேலை செய்து உற்பத்தியைப் பெருக்கித் தங்களது அதிருப்தியைத் தெரிவித்துள்ளனர்.

- ராஜா

# வாரீர் புதுமை தவழ்ந்திட.




பார்த்தறியாப் புதுமை. பரவசக் கிளுகிளுப்பு. லிரில். அலையெறியும் தளதள பச்சை. அதன் நயமோ குளுகுளு எலுமிச்சை...புதுக் குமரியாய் உங்களைப் பூரித்தெழ வைக்கும்.

**லிரில்**
புத்துணர்வு சோப்

**மனம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.**

லின்டாஸ்-LR.27-2012 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு



# நீரில் அழும் மீன்கள்!

சிதம்பரம் நாககோபாலன்

நீச்சல் சம்பந்தப்பட்ட விவரங்கள் அடங்கிய புகைப்படத்துடன், கூடிய அமெரிக்காவிலிருந்து ஸ்பெஷலாக அப்பா வரவழைத்துக் கொடுத்த புத்தகத்தை மல்லாக்கப் படுத்தவாறு பார்த்துக் கொண்டிருந்த சுஜி மணி சப்தம் கேட்டுக் கடிகாரத்தைப் பார்த்தாள்.

மணி நான்கு.

சுஜி அவசர அவசரமாக காரை ஸ்டார்ட் செய்தாள். இப்பவே ஒன் அவர் லேட்!... பாவம் .... பகன் காத்துக் கொண்டிருப்பாரே!

நீச்சல் உடையில் ரெடியாகி பகன் வரவுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள்.

பிரபல நீச்சல் வீரர் மகிர் சென்னிடம் பயிற்சி பெற்ற பகவான் என்னும் பகனைத் தம் மக்களுக்கு நீச்சல் கற்றுத்தர ஏற்பாடு செய்திருந்தார் சுஜியின் தந்தை கோடீசுவரரான டாக்டர் சர்மா. சென்னையில் பிரபல ஹோட்டலில் தங்கிப் பல முக்கிய புள்ளிகளுக்கு டிரெயினிங் கொடுத்து வருகிறான் பகன் — இளைஞன்.... கெட்டிக்காரன்.

நியூ அட்மிஷனும் .... மம்மூ என்று பெயராம். நேரம் பார்த்து ஆரம்பித்து விட்டு வருவதாகக் கேள்விப்பட்ட சுஜி, சற்று சோர்வுற்றவளாய் ஸ்விம்மிங் பூல் எதிரிலுள்ள பெஞ்சில் உட்கார்ந்தாள்.

சிந்தனையிலிருந்து விடுபடவும், தூரத்தில் பகன் வந்து கொண்டிருக்கவும் சரியாக இருந்தது.

"நியூஅட்மிஷனுக்கு பூஜை போட்டாச்சா?" என்றாள் சுஜி கண்களைச் சிமிட்டியவாறு.

"வெரி நைஸ் ... சுஜி... நீச்சல்ங்கிறது?" எப்படின்னு கூட தெரியாம என் கிட்டே வந்தா .... அப்பப்பா ... ஆரம்பத்திலேயே சுமையா இருக்கு. என்ன செய்யறது ... டிப்டி கலெக்டரோட பொண்ணும்... ஓ.கே. சொல்லிட்டு வந்தேன். நாளைக்கு இங்கேயே டிரெயினிங் ஆரம்பம்... சரி, சரி. ரொம்ப நேரமா காத்துக்கிட்டிருக்கியா சுஜி...." என்ற பகன் மேல் சட்டை, பாண்ட்டைக் கழற்றி நீச்சல் உடையில் ரெடியானான்.

"கிட்டத்தட்ட முக்கால் மணி நேரமாச்சு. போகட்டும். ஸ்விம்மிங்பூல் அனுப்பறத்துக்கு டாடிக்கு இஷ்டமே இல்லே. போன வருஷம் சுழலில் மாட்டிக் கொள்ளத் தெரிந்தவளை எப்படியோ காப்பாத்தினீங்க. பிறகு தொடர்ந்து பல கண்டங்கள். இப்ப கடல் போட்டியில் எனக்கு ஏற்பட்ட அனுப்பு, சலிப்பு இதையெல்லாம் நினைச்சு — கொஞ்சம் கொஞ்சமா நிறுத்திக்கச் சொல்றார் — போதாக் குறைக்குக் கல்யாணம் ஏற்பாடு செய்யப் போகிறாராம்...."

"குட் .... அப்பா தன்னோட கடமையை காலா காலத்தில் செய்ய நினைக்கிறார். தப்பு இல்லையே...." என்றான் பகன் அவளை ஒரு மாதிரியாகப் பார்த்தவாறு.

"நீச்சல் துறையில் ஒரு 'நேம்' வாங்குற வரைக்கும் மேரேஜ் பற்றி பேசக் கூடாதுன்னுட்டேன். டாடி வாயைத் திறக்கவேஇல்லே. சொல்ல மறந்து விட்டேனே.. இன்னிக்கு டாடியை அழ வச்சுட்டேன். அதை நினைக்க எனக்கே வருத்தமா இருக்கு...." என்ற சுஜியின் முகம் வாட்டமுற்றது.

"என்ன சொல்றே சுஜி... டாடியை அழ வெச்சியா. இன்னமும் குழந்தையாகவே இருக்கியே நீ. என்ன கலாட்டா செய்தாய்?" பகன் பரபரப்போடு கேட்டான்.

"எப்பவோ ஒரு தரம் என்னை டாக்டர் கிட்டே போய் 'செக்அப்' பண்ணிக்கச் சொல்லியிருந்தார். சில பாரங்களில் கையெழுத்தும் போட்டுக் கொடுத்திருந்தேன். அது எதுக்குன்னு இப்பதான் புரியுது...." என்று சுஜி பகனைக் கூர்ந்து நோக்கினாள்.

பகன் புரியாமல், மேற்கொண்டு என்ன சொல்லப் போகிறாளோவென்ற பயத்தில் வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"ஒரு லக்ஷத்துக்கு என்னை இன்ஷ்யூர் பண்ணியிருக்கார்! 'ஏம்ப்பா... ஒரு மில்லியனரோட மகள் உயிர் மதிப்பு ஒரு லக்ஷம் தானா'ன்னு கேட்டேன். அடுத்த வினாடி 'கோ'ன்னு அழுதுட்டார்."

"நாட்டி கேர்ல். நீ அப்படிக் கேட்டது தப்பு சுஜி. உங்க அப்பாவோட பாசத்தைப் புரிஞ்சுக்காம இன்ஷூர் பண்ணினதை வேற 'வ்யூவோட' பார்த்துட்டே...." பகன் சற்று உணர்ச்சி வசப்பட்டவனாகவே சொல்லி முடித்தான்.

"ஆமாம், பகன். மிஸ்டேக் பண்ணிட்டேன். பிறகு நானே அவரைச் சமாதானம்

பண்ணி, 'எக்ஸ்யூஸ்' கேட்டுண்டு புறப்பட்டேன். அதுதான் லேட்....''

''சரி, சரி. அதைப் பற்றி நினைச்சு இனிமே மனம் குழம்ப வேண்டாம். நானும் உங்கப்பாவுக்குப் போன் பண்ணிச் சமாதானப் படுத்தறேன்.'' என்ற பகனை இடைமறித்தாள் சுஜி.

''ஆமா.... கேக்கணும்ன்னு நினைச்சேன். நீங்க இன்ஷூர் பண்ணியிருக்கீங்களா?''

''இந்த விஷயங்களில் நானும் உன்னைப் போலவேதான். இதிலெல்லாம் எனக்குக் கொஞ்சம்கூட உடன்பாடு கிடையாது. ஒரு தடவை பாண்டிச்சேரியில் சிவபால் என்ற பையனுக்கு 'ஸ்விம்மிங்' கற்றுக் கொடுத்தேன். நைஸ் பாய். கமல் மாதிரியே இருப்பான். என்கிட்டே ரொம்ப மரியாதை. நான் பணத்தை எதிர்பார்த்துச் சொல்லிக் கொடுக்கலே. அவனோட மாமா சிதம்பரத்திலிருந்து வந்திருந்தார். அவர் எல். ஐ. சி. ஏஜண்டாம். அன்னிக்கு வற்புறுத்தி ஐம்பதாயிரத்துக்கு இன்ஷூர் பண்ணி முதல்மூன்றாண்டுகளுக்குப் பணத்தையும் அவனே கட்டி — பாலிசியை எனக்கு அனுப்பச் சொல்லிட்டான்.''

''வெல்.... நல்ல காரியம் செய்தார் சிவபால். ஈவன் தோ.... தண்ணீர்தான் உங்களைக் கண்டு பயப்படுமே... உங்களுக்கு எதுக்கு இதெல்லாம்.....''

''அதோடு சரி. பிறகு யார் அதைக்கட்டினார்கள்? இங்குதான் பல பிரச்னைகள். பிழைப்பே நீச்சலடிக்கும் பொழுது சேமிப்பாவது மண்ணாவது... சரி, சரி நேரம் போவது தெரியாமல் பேசிக் கொண்டிருந்தால் எப்படி? இன்னிக்கு 'டைவ்' அடிக்கறதில் சில மாடல்களைச் செய்து காட்டப் போகிறேன், கமான், கமான்'' என்ற பகன் திடீரென்று எழுந்து அவளை உற்சாகப்படுத்தினான்.

சுஜி வெகு வேகமாக நீருக்குள் குதித்த பொழுது, நீர்த்திவலைகள் சிதறி, பெரும் வளையங்கள் எழுந்து விரிந்து பெருகின!

•

சுஜியின் தந்தை டாக்டர் சர்மா எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் சுஜி கேட்பதாக இல்லை. முடிவில் அவள் விருப்பப்படியே ஓ. கே. சொல்லி விட்டார்.

கர்நாடக மாநிலத்திலுள்ள — ஒரு காட்டாற்றை எதிர்நீச்சல் போட்டு 10 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள எல்லையை அடையவேண்டும். அகில இந்திய ரீதியில் நடைபெறும் போட்டி இது.

போட்டி கடுமையானது ... ஆபத்தானது. யோசிக்க வேண்டிய விஷயம் தான். பகன் தான் முதன் முதலில் போட்டி பற்றித் தகவல் கொடுத்தானும், சர்மாவுக்கு இஷ்டமில்லையென்று தெரிந்ததும் எவ்வளவோ சொல்லித் தடுக்க முயன்றான். சுஜி முடிவாகச் சொல்லி விட்டாள்.

''இதோ பாருங்க. பகன்... நீங்களும் போட்டியில் கலந்துக்கலாம். எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனா எனக்குத் துணையா நீங்கள் வருவதை ஆட்சேபிக்கிறேன். விரும்பவும் இல்லை. அதனால் என்னோட 'டாலண்ட்' எனக்குத் தெரியாமப் போயிடும். ஒரு வேளை நான் 'வின்' பண்ணினால் உங்களுக்குப் பெருமை. நீங்க ஜெயிச்சா எனக்குச் சந்தோஷம். குருபக்தி இன்னும் அதிகமாகும்.....''



சர்மாவே அடங்கிப் போன பிறகு, பகன் பதில் பேச முடியுமா?

மிகக் கடுமையான பிராக்டிஸ் செய்து வந்தாள் சுஜி. பகன் அவளுக்கு முழு ஒத்துழைப்பு கொடுத்தான்.

குறிப்பிட்ட தினத்திற்கு நான்கு நாட்கள் முன்பாகவே அவர்கள் கார் கிளம்பி விட்டது. கர்நாடகத்தின் முக்கிய பகுதிகளை யெல்லாம் சுற்றிப் பார்த்து ரசித்து விட்டுப் போட்டி நடக்கும் ஊரை அடைந்தார்கள். இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் நீச்சல் வீரர்கள் வந்து குவிந்திருந்தார்கள்.

நூற்றுக் கணக்கான வீரர்கள் மத்தியில் சுஜியும், பகனும் நம்பிக்கையோடு நீந்திக் கொண்டிருந்தார்கள்!

இரண்டு வாரங்கள் ஓடி விட்டன.

டாக்டர் சர்மா சோகமாக உட்கார்ந்திருந்தார். முடிவு இப்படி, ஆகுமென்று எதிர் பார்க்கவில்லை.

'காலிங்பெல்' ஒலி கேட்டு நினைவுக்கு வந்தவருக்கு, சற்றைக்கெல்லாம் சுஜி வருவது தெரிந்தது.

''என்ன டாடி ... நீங்க இன்னும் ரெஸ்ட் எடுக்கலியா? ஆபீஸ் போய் எல்லா 'பார்டிகுலர்க'ம் கொடுத்து விட்டேன். குறித்துக் கொண்டார்கள். எப்படியோ அவர் குடும்பத்திற்கு ஐம்பதாயிரம் ரூபாய் சேர்ந்து விடும்... வீட்டுக்குப் போய்ச் சமாதானம் செய்து விட்டு வந்திருக்கேன்... இனிமே என்ன செய்ய முடியும்? ....டோண்ட் ஒர்ரி ...' டாடி... போய்ப் படுத்துத் தூங்குங்க...''

மகளின் ஆறுதல் வார்த்தைகள் அவரைச் சமாதானப்படுத்த முடியவில்லை என்பதை, அவர் மீண்டும் பேச ஆரம்பித்ததிலிருந்து தெரிய வந்தது.

''பகன் ரொம்ப நல்லவன்ம்மா ... அதனால்தான் அவனை உனக்கு செலக்ட் பண்ணினேன் .... அவனை மாதிரி 'ட்யூட்டர்' அமைவது ரொம்பக் கஷ்டம்.....'' என்றவர்

''நீங்கள் அந்த நடிகரைக் கல்யாணம் செய்து கொள்வதாய் அறிவித்து,பிறகு வாபஸ் பெற்றுக் கொண்டீர்களே, அவருடன் என்ன தகராறு?''

''தகராறு சே!சே! அதெல்லாம் ஒன்றுமில்லை! திருமண தேதிக்கான கால்ஷீட் ஒத்துவரலே அவ்வளவுதான்!'' - மு. செல்வபாண்டியன்

---

சற்று மௌனம் சாதித்தார். கண்களினின்று வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டார். மகளிடம் சொல்ல முடியாததைத் தமக்குள் சொல்லிக் கொண்டார்.

''பகன்... கல்யாணமானவன்னு தெரிஞ்சதும் ரொம்பவும் சங்கடப்பட்டேன். நம்பவும் முடியலே ...இவ்வளவு அழகான சிறு வயசுப் பையனு, கல்யாணம் பண்ணி மூணு குழந்தைகளுக்குத் தகப்பனுயிட்டான்னு மலைச்சுப் போனேன். ஏன்னு, உன்னை அவனுக்கே கொடுத்துடலாம்னு கூட நினைச்சதுண்டும்மா நினைச்சதுண்டு ... பாவம் இப்படிப் போயிட்டானே.....''

''டாடி.... சும்மா இப்படி கவலைப் பட்டா எப்படி ... ஒரு டாக்டருக்கு இதுக்கு மேலே எப்படி 'அட்வைஸ்' பண்ண முடியும்னு தெரியலே .....'' சுஜி கடிந்து கொண்டது அவருக்குத் தெரிந்தது. சுரீரென்று பட்டது நிதானித்துக் கொண்டார்.

அம்மா சுஜி .... இந்தக்கவர் என் டேபிள் மேலே கிடந்தது .... பகன் எழுத்து மாதிரி இருக்கு .... ஒருவேளை உனக்கு எழுதியிருப்பானே .... படித்துப் பார்....'' என்று சொல்லிக் கொண்டே, கவரை மகளிடம் நீட்டினார்.

சுஜி அவசரம் அவசரமாகப் பிரித்துப் படித்தாள் — தனக்குள்.

சுஜி.....

என்னை மன்னித்து விடு ... நான் வேண்டுமென்றே விரும்பியே செத்தவன் என்பதற்குச் சான்றுதான் இந்தக் கடிதம். பாவம் .... குருபக்தி மிக்கவள் நீ ... போட்டியில் கலந்து கொண்டு — இப்படி அநியாயமாய்ப் போய் விட்டாரேயென்று இனியாவது கலங்காமல் இரு.......

உனக்கே துரோகம் நினைத்த பாவி — இந்த பகன்!

கடந்த பல வருடங்களாகப் பெண்களுக்கே விரும்பி ஸ்விம்மிங் கற்றுக் கொடுத்திருக்கிறேன். கற்றுக் கொள்ளும் ஆர்வத்தில் பலர் தன்னையே என்னிடம் இழந்திருக்கிறார்கள். அந்த லிஸ்டில் உன்னை அவ்வளவு சீக்கிரமாக அணுக முடியா விட்டாலும் — பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தேன் என்பது உண்மை.

தண்ணீர் மட்டத்தில் எனது இரண்டு முரட்டுக் கரங்களையும் முன்புறம் நீட்ட, அதில் நீ படுத்துக் கொண்டு ஒரு குழந்தையைப் போல் கையைக் காலை உதைத்துக் கொண்டு நீந்தக் கற்றுக் கொண்டதை இப்பொழுதும் நினைத்துப் பார்க்கிறேன். அப்பொழுதெல்லாம் எனது கரங்கள் எவ்வளவு சேஷ்டை செய்திருக்கும். அதற்காக வெட்கப்படுகிறேன்.....

ஆயுள் பூராவும் நீ என்னிடத்தில் நீச்சல் கற்றுக் கொண்டிருக்க வேண்டுமென்று சில வற்றைச் சொல்லிக் கொடுக்காமலும், உன் ஆர்வத்தைக் குறைக்கும்படியான சில சில்லறை வேலைகளையும் செய்திருக்கிறேன்.

நீரில் மூழ்கி வெகுதூரம் நீந்தும் பொழுது உனக்குத் துணையாக உன்னுடன் ஒட்டிக்

கொண்டு வருவதாக நீ நினைத்திருக்கலாம். ஆனால் உன்னை அணைக்கவே அப்படி வந்திருப்பது உனக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை.

சுழல் உள்ள இடத்தில் உன்னை நீந்த வைத்து — எதிர்பார்த்தபடி நீ இரைறிப் போகின்ற சமயம் — ஓடி வந்து காப்பாற்றுவது போல் செய்து ... அத்தனையும் நடிப்பு.. வெகுளிப் பெண்... குருபக்தியில் எல்லாமே உண்மையாய் நம்பி விட்டிருக்கிறாய்.

'கண்ணி' வைத்துப் பிடிக்கவே — உனக்குப் பல கண்டங்களை ஏற்படுத்தி மரண பயத்தைக் கொடுத்தேன். ஆபத்பாந்தவன் போல் குறுக்கிட்டிருக்கிறேன்....

சென்ற வாரம், வழக்கம் போல் நீ டிரஸ் மாற்றிக் கொள்வதற்காகக் கொண்டு வரும் பையிலிருந்து — உன்னையறியாமல் கீழே விழுந்து கிடந்த பின் கோக்கப்பட்ட பல ரசீதுகளைப் பார்க்க நேர்ந்தது. என்னுள் ஒரு முடிவு ஏற்பட்டதும் அதே சமயம்தான்—

கடந்த மூன்றாண்டுகளாக இன்ஷூரன்ஸ் கட்டப்படாமலிருப்பதை — எப்படியோ தெரிந்து கொண்டு, என்னையறியாமல் என் பெயருக்குப் பணம் கட்டியிருந்ததற்கான ரசீதுகள் அவை! உனது பவித்திர குரு பக்திக்கு இதைவிட வேறு என்ன சொல்ல முடியும்?

உனக்குத் தெரியாமல், உன் அப்பாவிடம் ஆயிரக்கணக்கில் பணம் வாங்கியிருப்பதை உன்னிடம் தெரியப்படுத்தவில்லையே நான்?

'இனி இருந்து என்ன சாதித்து விடப் போகிறோம்' என்ற எண்ணம் ஒருவனுக்குத் தோன்றி விட்டால் அவன் எதைப் பற்றியும் கவலைப்பட மாட்டான். அந்த நிலை எனக்கும் ஏற்பட்டதால் —

காட்டாறு நீச்சல் போட்டி எனக்குக் கை கொடுத்தது. பயன்படுத்த முடிவு செய்தேன்.

திட்டப்படி எனது பனியன் குழந்தைகளுடன் இனம்பி உங்கள் பயணத்தில் கலந்து கொண்டேன் ... அவர்களையும் உங்களிடம் ஒப்படைக்க வேண்டுமல்லவா?...

போட்டியில் கலந்து கொள்வதாகப் பேர் பண்ணி விட்டு ஆற்றோடு — அந்த எதிர்க்கும் சக்தியின்றி — அதன் வேகத்தோடு, அதன் முடிவோடு சங்கமமாகிவிடத் தீர்மானித்து விட்டேன் .... நான் சாவதுதான் தர்மம் அதுவே எனக்கு ஆத்ம திருப்தி.

திட்டப்படி நான் எதிலும் வென்றிருக்கிறேன் — இதிலும் அப்படித்தான். இந்த முடிவுக்குக் காரணம் — உன்னிடம் தோற்றுப் போனதால். எனது வாழ்த்துக்கள்!

—பகவான்—

கடிதத்தை முடித்த கஜி, மடித்து ஹாண்ட் பாக்கில் வைத்தாள். அப்பாவிடம் அதுபற்றி எதுவும் பேச விரும்பாதவள் போல், பதிலுக்கு அன்றைக்குத் தபாலில் வந்த பல கடிதங்களைத் தந்தையிடம் நீட்டினாள்.

"இன்றுதாம்ப்பா இவ்வளவு கடிதங்களும் வந்திருக்கின்றன. மெதுவாகப் படித்துப் பாருங்கள்...."

ஒரு கடிதத்தை மட்டும் சர்மா படிக்க முயன்றார்...

கர்நாடக மாநிலத்தில் நடந்த காட்டாற்று நீச்சல் போட்டியில் — முதன்மையாக வந்து ஒரு 'ரெகார்டை'யே ஏற்படுத்தி விட்டீர்கள்! பாராட்டுக்கள்! உங்களது இடைவிடாத முயற்சி பல வெற்றிகளைக் குவிக்குமென்ற நம்பிக்கையில் —

பெரம்பலூர் ரோட்டரி சங்கத்தின் சார்பில் உங்களைப் பாராட்ட விரும்புகிறோம். அதுசமயம் உங்கள் அனுபவங்களைப் பற்றி பேசவும் கோருகிறோம். பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கும்.

எஸ். என். பிரசன்னம்
(தலைவர், ரோட்டரி சங்கம்)

மகளைப் பார்த்தார் சர்மா.

கஜி நிதானத்துடன் தந்தையின் பார்வையை ஏற்றாள்....

பகனுக்காக அழுவதா...?

பெற்ற வெற்றிக்காக மகிழ்வதா....?

நீரில் அழும் மீன்களாய், வெளியுலகுக்குத் தெரியாமல் அவர்கள் விழிகள் கழன்றன!

## ஷாக் அடிக்காத ஒயர்!

மின்சாரம் பாய்கிற ஒயர் பழசாகி நைந்து போனாலோ அல்லது அதன் மேலே உள்ள பாதுகாப்பு உறை வெட்டுப்பட்டுப் போனாலோ ஷாக் அடித்து மரணத்தில் முடிகிற ஆபத்து உண்டு. படத்தில் மின்சார ரம்பம் கொண்டு பலகையை அறுக்கிறார். பலகைக்கு அடியிலே செல்கிற ஒயரையும் சேர்த்து அறுத்துவிட மாட்டார் என்பது என்ன நிச்சயம்? அப்போது ஷாக் அடிக்கலாம் அல்லவா?

இதைத் தவிர்க்க ஒரு புதுவித கேபிள் ஒயரை மேற்கு ஜெர்மானிய விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர். ஒயருக்குச் சிறிதளவேனும் சேதம் ஏற்பட்டுள்ளதாகத் தெரிந்தால் போதும், உடனே தானியங்கு முறையில் மின்சாரத் தொடர்பு துண்டிக்கப்படுகிறது. விறுவிப் போதுக்கும் மிகக் குறைந்த நேரத்தில் காண்ட் ஆஃப் ஆகி விடுகிறது!

# 9

“நான் என்ன சொல்லிண்டிருந்தேன்?'' என்று குப்புசாமி பாதி ராதாவையும் பாதி தம்மையுமே கேட்டுக் கொண்டு யோசித்தார்.

ரவிக்கும் தனக்கும் ஒருவரையொருவர் கல்யாணம் செய்து கொள்வதில் விருப்பம் உண்டு என்று அவள் தெரிவித்த போது அவர் மேற்கொண்டு, ''அப்ப சரி, இப்போ...'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தது அவளுக்கு நன்ருக ஞாபகம் இருந்தது. ஆனல் அதை அவருக்குச் சொல்வதில் அவளுக்குக் கூச்சம். தகப்பனரே ஞாபகப் படுத்திக் கொண்டு மேலே தொடரட்டும் என்ற எண்ணத்தில் தானும் யோசிப்பவளைப் போலப் பாசாங்கு செய்தாள்.

''ஆங் ... ரவிக்கும் உன்னைக் கல்யாணம் செஞ்சுக்கணும்கற எண்ணம் இருக்குன்னு சொன்னே, இல்லியா?''

''ஆமா.''

''ராதா, நீ சின்னக் குழந்தை இல்லே. வயசு இரு:பத்தொண்ணுச்சு. விவரம் புரிஞ்சவ. அதனலே நான் சொல்றதையெல்லாம் சரியா அர்த்தம் பண்ணிக்குவேன்னு நினைக்கறேன்...'' என்று கூறி நிறுத்தி ராதாவின் முகத்தையே உற்றுப் பார்த்தார்.

''சொல்லுங்கப்பா.''

''உங்கம்மா இருந்திருந்தான்னு நான் இதைப் பத்தியெல்லாம் உங்கிட்டப் பேச வேண்டிய தேவையே இருந்திருக்காது. எல்லாம் அவ பொறுப்பாப் போயிட்டிருக்கும். அவ கண்ணை மூடினப்போ உனக்கு அஞ்சோ ஆறோ தான் வயசு. ஏதோ நீ செஞ்ச புண்ணியம், நான் செஞ்ச அதிர்ஷ்டம், சரோஜாவைப் போல ஒரு நல்லவ உனக்கு சித்தியா அமைஞ்சா. இல்லாட்டா நீ எவ்வளவு கஷ்டங்கள் பட வேண்டியிருந்திருக்குமோ நான் அதைப் பார்த்துக் கண் கலங்க வேண்டி இருந்திருக்குமோ...''

''அப்படியெல்லாம் தான் ஒண்ணும் நடக்கல்லியேப்பா. நடக்காததைப் பத்தி இப்ப நினைச்சுக் கலங்குவானேன்? சந்தோஷப்பட வேண்டிய விஷயம்னு இது?'' என்று ராதா கேட்டாள். குப்புசுவாமியின் பேச்சு எதை உத்தேசித்து நடை போடுறது என்று புரியாத ஒரு குழப்பம் அவள் மனத்தில்.

''சரிம்மா நீ சொல்றது. நடக்காததை நினைச்சுக் கண் கலங்கக் கூடாது தான். ஆனல்என் பயம் அதுவல்ல. இந்தப் பதி



னெஞ்சு, பதினாறு வருஷமா நீஎப்படி கண் கலங்காம, சந்தோஷமா வாழ்ந்தியோ, அதே மாதிரி கடைசி வரையிலும் நீ இருக்கணும் கறதுதான். அதுக்காகத்தான் நான் இப்போ உன்னோட மனசு திறந்து பேச வேண்டி யிருக்கு..''

''நீங்க பேசறதைப் பார்த்தா உங்க மனசுலே ஏதோ ஒரு சந்தேகம் இருக்காப்பலே தோணறது.''

''கரெக்ட்.''

''சொல்லுங்கப்பா.''

''ரவி உனக்குத் தகுந்தவன்னு உனக்குத் தோணறதா?''

அதைப் பத்தி என் மனசுலே சந்தேகமே இல்லேப்பா.''

''உனக்கும் அவனுக்கும் வயசு வித்தியாசம் கூட இல்லியேம்மா? ரெண்டு பேருக்கும் கிட்டத்தட்ட ஒரே வயசு போலிருக்கு?''

''இது ஒரு பெரிய விஷயமாப்பா? அவர் என்னைவிட ரெண்டு வருஷம் பெரியவர்தான். ஒரே வயசாக இருந்தாலும் தான் என்ன? மனைவி கணவனைவிட, வயசானவளாகக்கூட எவ்வளவோ பேர் இருக்கா.''

''வயசு விஷயத்தை மாத்திரம் மனசுலே வெச்சுண்டு நான் சொல்லலே. அதுவும் ஒரு யோசிக்க வேண்டிய விஷயம்னு சொல்ல வந்தேன்.''

''அப்படின்னா? இன்னும் விஷயங்களும் யோசிக்க வேண்டியது இருக்கா?''

''கண்டிப்பா. ரவியின் அப்பா பி. எஸ். ஹைஸ்கூல்லே வாத்தியார்னு சொன்னே.. அந்த வேலையிலே அவருக்கு என்ன சம்பளம் வரப் போறது. என்ன வசதி இருக்கப் போறது? அதுவும் இப்போ உடம்புக்கு வந்து படுத்துண்டுட்டார். பராலிடிக் அட்டாக்னு சொன்னே. மறுபடியும் அவர் எழுந்து உத்தியோகத்துக்குப் போவாரா இல்லியா சொல்ல முடியாது. அவருக்கு பூர்வீக ஆஸ்தி ஏதாவது இருக்கோ இல்லியோ? ரவிக்கு இந்த பாங்க் வேலையில் இன்னைக்செல்லாம் இருந்தாலும் என்னத்த கிடைச்சுடப் போறது? நம்மோட நிலைமை உனக்குத் தெரியும்னு நினைக்கிறேன். உன் பங்குக்கு மட்டும் லட்ச ரூபாய்க்குக் குறையாமல் தேறும். இதையெல்லாமும் கூட யோசிக்சணும். என்ன சொல்றே?''

''நான் என்ன சொல்ல இருக்கு அப்பா? உங்க கவலையும் பயமும் அநாவசியம்னு எனக்குத் தோணறது. பணமும் அந்தஸ்தும் யார் வேணுலும் எப்ப வேணுலும் முயற்சியினாலே சம்பாதிச்சுக்கலாம். நீங்ககூட இந்த வித்தியாசங்களைப் பத்தியெல்லாம் இவ்வளவு பெரிசா நினைப்பேள்னு நான் நினைச்சிருக்கல்லே. சினிமா டிராமாவிலே யெல்லாம் வர்ற அப்பா மாதிரி இருக்கு'' என்று சீரியஸாக ஆரம்பித்த பேச்சைத் தமாஷாக முடித்தாள்.

குப்புசாமி சிரித்தார். ''நல்லாத்தாம்மா பேசறே. ஆனா ஒண்ணு ஞாபகம் வெச்சுக்கோ சினிமா, டிராமாவிலே அவா புதுசா ஒண்ணையும் கற்பனை பண்ணி எழுதிடலையே? வாழ்க்கையிலே பல இடங்கள்லே நடக்கறதைப் பார்த்துத்தானே எழுதறா?''

''எதுவானாலும் நீங்கதான் இப்போ எனக்குக் கல்யாணம் பண்ற உத்தேசம் இல்லேன்னு சொல்லிட்டேளே? அதைப் பத்தி இப்போ நாம மனசைப் போட்டு ஏன் குழப்பிக்கணும்? அப்புறம் பார்த்துக்கறது.''

''முக்கியமா நான் அதைப் பத்தித் தான் உன்னோடு பேச



ணும்னு நினைச்சேன்.. பேச்சு வேற திசையிலே போயிட்டுது'' என்று கூறி மேலே சொல்லுவதற்குத் தயங்கினார்.

''சொல்லுங்களேன் அப்பா.''

''ரவி நல்லவனாகவே இருக்கலாம் ராதா. இல்லேன்னு நான் சொல்லல்லே. ஆனா கல்யாணம் இப்போதைக்கு இல்லேங்கற போது நீங்க ரெண்டு பேரும் ரொம்ப நெருங்கிப் பழகறது அவ்வளவு உசிதமில்லேன்னு எனக்குத் தோணறது.''

''இந்த விஷயத்துலே நீங்க என் மேலே அவநம்பிக்கையே பட வேண்டாம் அப்பா.''

''உம் மேலே நம்பிக்கையில்லாமெ சொல்லலே. ராதா. எனக்கு உம் பேர்லே முழு நம்பிக்கை இருக்கு. ஆனாலும் உன் வயசு அப்படி. எச்சரிக்க வேண்டியது என் கடமை. ஜாக்கிரதையாயிருக்கிறதுலே தப்பு ஒண்ணும் இல்லியே? அதுக்காக நீ ரவியோட பேசக் கூடாதுன்னு நான் சொல்லலே. அளவோட பழகினா நல்லதுன்னு சொல்றேன். அவ்வளவு தான்.''

''இப்ப அந்த அளவு கடந்து போயிடுத்துங்கற சந்தேகம் உங்களுக்கு இருக்கா?''

''நோ நோ. நாட் அட் ஆல். ஆனா இனிமே அப்படி ஆயிடுமோங்கற பயம் இருக்கு.''

''பயப்படாதிங்கப்பா. நான் என்னிக்கும் முறை தவறி நடந்துக்க மாட்டேன்.''

''அது போதும்மா எனக்கு. சரோஜாவை விட்டே இதை நான் உங்கிட்ட சொல்லச் சொல்லியிருக்கலாம். ஆனா அப்படி செஞ்சிருந்தா இப்போ எனக்கு ஏற்பட்டிருக்கிற சந்தோஷமும் நிம்மதியும் ஏற்பட்டிருக்காது''

''வேறே ஏதாவது சொல்லணுமாப்பா?''

''ஏன்? தூக்கம் வரதா?''

''இல்லே. சும்மாத்தான் கேட்டேன்.''

''நாகுவைப் பத்தி நீ என்ன நினைக்கிறே?''

திடுதிப்பென்று எதிர்பாராத வகையில் அந்தக் கேள்வி அவரிடமிருந்து வந்தது.. என்ன பதில் சொல்வதென்று ராதாவுக்குத் தெரியவில்லை.

''அவரைப் பத்தி நான் என்ன நினைக்கறதுக்கு இருக்கு? இன்னிக்குத் தான் அவரைப் பார்த்தேன் — பத்து வருஷத்துக்கப்புறம் சரியா ரெண்டு வார்த்தைகூட இன்னும் பேசல்லே.''

''ரொம்பக் கெட்டிக்காரன்.''

''அதுதான் முதல்லேயே சொல்லிட்டேளே'' என்று கூறி ராதா சிரித்தாள்.

குப்புசாமி சிரிக்கவில்லை. அதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறதென்று அவருக்குப் புரியவில்லை. மகள் தன்னைக் கேலி செய்கிறாளா அல்லது தான் மேற்கொண்டு நாகுவைப் பற்றி எதுவும் பேசுவது அவளுக்குப் பிரியமில்லை என்பதை நாசுக்காகத் தெரிவிக்கிறாளா?

''உனக்கு ஏன் இன்னும் கல்யாணம் பண்ணலேன்னு கேட்டானே. கவனிச்சியா?''

''சாதாரணமா யாரும் கேக்கக்கூடிய கேள்விதானே?''

''எனக்கு அப்படி தோணல்லே. மனசிலே எதையோ வெச்சுண்டுதான் அவன் அப்படிக் கேட்டிருக்கான்.''

''அவர் மனசிலே என்ன இருந்ததோ யாருக்குத் தெரியும்?''

''உன்னைப் பார்த்ததுமே மலைச்சுப் போய் ஒரு நிமிஷம் நின்னுட்டான். நான் கவனிச்சேன்.''

''நான் கவனிக்கல்லே.''

''பிடி குடுக்காமலேயே பேசறியே?'' என்று குப்புசாமி சிரித்தார்.

ராதா சிரிக்கவில்லை. நாகுவைப் பற்றி எதற்காக இப்போது பேச்சு என்று அவள் மனம் எண்ணிக் கொண்டிருந்தது.

''வேறு ஏதாவது சொல்லணுமாப்பா?'' என்று நான் அவரைக் கேட்டது எவ்வளவு தவறாகப் போயிற்று? தர்மசங்கடத்தில் அல்லவா மாட்டிக் கொண்டு விட்டோம் என்று நினைத்தாள்.

''அவர் சாப்பிட்டு வர்ற நேரமாச்சு'' என்று அப்பாவின் கவனத்தை வேறு திசையில் திருப்ப முயன்றாள் ராதா. ஆனால் குப்புசாமி விடுபவராக இல்லை.

''உன்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்கற உத்தேசம் அவன் மனசிலே தோணியிருக்கும்னு நினைக்கறேன்.''

ராதா பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக அமர்ந்திருந்தாள்.

''சரோஜாவுக்கும் அந்த அபிப்பிராயம் இருந்தால் ஆச்சரியப்படுவதற்கு இல்லை'' என்று குப்புசாமி தொடர்ந்தார்.

''உங்களுக்கு?'' என்று ராதா தன் மனத்தில் எழுந்த ஆத்திரத்தையெல்லாம் கட்டுப் படுத்திக் கொண்டு கேட்டாள்.

''எனக்குந்தான். ஏன் கூடாது? ரவியை விட நாகு எல்லா விதத்திலேயும் உனக்கு ஏத்த வரன்.''

''அப்படின்னு நீங்களெல்லாம் நினைச்சால் போதும். இல்லியா? என் அபிப்பிராயத்துக்கு

### அவனுக்கென்றா ஒரு சட்டம்!

அமெரிக்காவில் ஓர் உயர் நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் ஜோரோல்ட் பட்டன் டார்ப். பள்ளியின் சட்ட திட்டங்களைக் கண்டிப்பாகக் கடைப் பிடிப்பவர்; கண்டிப்பானவர்.

ஒரு நாள் ஒரு மாணவன் ''ஐயா எனது தந்தையார் ஜனாதிபதியாகப் பதவி ஏற்கும் வைபவத்தில் நான் கலந்து கொள்ள அனுமதி வேண்டும்'' என்று கேட்டான்.

தலைமையாசிரியர் தயங்கினார். யோசித்தார். பிறகு அனுமதியளித்தார். சட்டத்தை மீறியல்ல.

அமெரிக்க ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் படுபவரின் மகன் தன் தந்தையாரின் பதவி யேற்பு விழாவிற்குப் போக அனுமதிக்கப்படுவான் என்ற புதிய சட்டத்தை பள்ளி சட்ட திட்டத்தில் உருவாக்கிய பின்!

- வி. ஆர். ராஜா

ஆதாரம்: ''அறிஞர்கள் வாழ்விலே'என்ற நூல்





## தூக்கமும் ஏக்கமும்

பல்கலைக்கழக மண்டபத்தில் புராணச் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தார் திருமுருக கிருபானந்த வாரியார். ஒரு நாள் சொற்பொழிவின் நடுவே ஒரு பெண்ணிடம் ''ஏம்மா நீ 'பெரியபுராணம்' படித்திருக்கிறாயா?'' என்றார். அப்பெண் 'இல்லை' என்றதும் ஏன் என்றார். ''புராணம் படித்தால் தூக்கம் வருகிறது'' என்றாள் அவள். உடனே 'நாவல்' படிக்கும் வழக்கம் உண்டா? என்று கேட்டதும் அவள் 'ஆம்' என்று தலையை ஆட்டினாள். உடனே ''அப்போது 'ஏக்கம்' வருமே அதற்கு என்ன செய்வாய்?'' என்றதும் அப்பெண் மறுமொழி கூறவில்லை. -கேட்டு ரசித்தவர்: ''சங்கரிபுத்திரன்''

---

இதிலே இடமே இல்லே. அப்படித்தானே?'' என்று படபடப்புடன் வார்த்தைகளைக் கொட்டினாள் ராதா.

''பதற்றப்படாதே ராதா. நீ கேட்டதாலே என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். அவ்வளவுதான். உனக்கு எப்படி அபிப்பிராய சுதந்திரம் இருக்கோ அப்படி எங்களுக்கும் இருக்கில்லியா? ஆனா உன் அபிப்பிராயத்துக்கோ இஷ்டத்துக்கோ விரோதமா நான் என்னிக்குமே நடந்துக்க மாட்டேன் ராதா. அதை நீ நம்பலாம். முடியுமானா உன் விருப்பத்தை எங்க விருப்பத்தின் திசையிலே திருப்பறதுக்கு முயல்வேன். எந்த வகையிலேயும் உன்னைக் கட்டாயப் படுத்த மாட்டேன். நான் எப்படி நடந்துண்டாலும் அதோட நோக்கம் உன் சந்தோஷம்தான் எதிர்கால வாழ்வுதான். அதிலே உனக்கு என் பேரிலே நம்பிக்கை இருக்கும்னு நினைக்கிறேன்'' என்று குப்புசுவாமி சிறிது உணர்ச்சி வசப்பட்டவராகவே கூறினார்.

''நான் ஏதாவது தப்பாப் பேசியிருந்தா என்னை மன்னிச்சிடுங்கப்பா'' என்றாள் ராதா தொண்டையடைக்க.

''அசடு. நீ ஒண்ணும் தப்பாப் பேசல்லே. சரி போ. போய்ப் படுத்துக்கோ. ஒண்ணுக்கும் கவலைப்படாதே.''

''சரி அப்பா.'' என்று ஒரு புன்முறுவலால் தகப்பனாரிடம் விடைபெற்றுக் கொண்டு அந்த அறையை விட்டு அகன்றாள்.

ராதாவால் தூங்க முடியவில்லை. சாமர்செட் மாமின் ''ஆஃப் ஹ்யூமன் பாண்டேஜ்'' ஐ எடுத்து வைத்துக் கொண்டு தான் படித்து விட்டிருந்த 670-வது பக்கத்திலிருந்து படிக்கத் தொடங்கினாள். எப்படி இந்த மனிதனால் கிட்டத்தட்ட 1000 பக்கங்களுக்கு மேல் இந்த நாவலை சுவாரசியம் குன்றாமல் எழுத முடிந்தது என்று பல முறை வியந்தபடியே மறுபடியும் வியந்து கொண்டு கதாநாயகன் ஃபிலிப்பின் வாழ்க்கை மேற்கொண்டு எந்தப் பாதையில் செல்லுகிறது என்று படிக்கலானாள்.

இரண்டு பக்கங்கள் கூடப் படித்திருக்க மாட்டாள். கதவில் 'டொக்' 'டொக்'. என்று யாரோ தட்டும் சத்தம் கேட்டது.

''வெறும் கதவுதான்'' என்றாள் ராதா. அவளுக்கு ஆச்சரியம். யாராக இருக்கும்? அம்மாவாக இருந்தால் கதவைத் தட்ட மாட்டாளே! 'ராதா' என்று குரல் கொடுப்பாள். அப்பாவாக இருக்க முடியாது. இத்தனை நேரம் அவரோடு தானே பேசி விட்டு வந்திருக்கிறாள்? மறுபடியும் வந்து தன்னைத் தொந்தரவு செய்வாரென்று தோன்றவில்லை. பின், வேறு யாராக இருக்கும்? கோபு தூங்கி விட்டிருப்பான். ஸ்ரீதரும், சீனுவும் இன்னும் சினிமாவிலிருந்து திரும்பி வந்ததாகத் தெரியவில்லை. அப்படியென்றால், பாக்கியிருப்பது விருந்தாளியாக வந்திருக்கும் நாகுதான். அவர் இப்படி வந்து கதவைத் தட்டுவாரா? ஆவலுடன் கதவையே பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள்.

சில விநாடிகள் கதவு திறக்கவேயில்லை. வெளியே நிற்பவர் உள்ளே வரலாமா என்று தயங்குவது போல் தோன்றியது ராதாவுக்கு. ஒரு சமயம் சாமா ஏதாவது கேட்பதற்காக வந்திருக்கிறானோ? சில சமயங்களில் அவன் அந்தமாதிரி தன் அறைக்குவந்து படிப்பதற்கு ஏதாவது பத்திரிகைகள், புத்தகங்கள் கேட்பது உண்டு.

''யார் சாமாவா? உள்ளே வரலாம் சாமா'' என்றாள்.

கதவைத் திறந்து கொண்டு புன்முறுவலித்தபடியே நாகு உள்ளே நுழைந்தான்.

''ஓ. ஐ ஆம் ஸோ ஸாரி'' என்றாள் ராதா. அவளுக்கு வெட்கமாகப் போய்விட்டது.

''பரவாயில்லே. நான் வருவேன்னு நீ எக்ஸ்பெக்ட் பண்ணியிருக்க முடியாதில்லியா?'' என்று கேட்டபடியே நாகு அவளுக்கு அருகில் இருந்த ஒரு நாற்காலியில் வந்து அமர்ந்து கொண்டான்.

''சாப்பிட்டாச்சா?'' என்று கேட்டாள் ராதா. வேறு எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்று அவளுக்குப் புரியவில்லை. புரியவில்லை என்பதைவிட பேச்சை ஆரம்பிக்கவே பிடிக்கவில்லை என்று சொல்லலாம். முதல் முதலாக அப்பா தன்னையும் ரவியையும் பற்றி யோசிக்கத் தொடங்கியிருக்கிற இன்றைக்கு நாகு குறுக்கே வந்தது அபசகுனமாக அவளுக்குத் தோன்றியது. அவன் வந்ததனால் தான் அப்பாவின் பேச்சே திசை மாறிப் போய் விட்டது என்று அவளுக்குத் தோன்றியது.

''ஆச்சு. சாமா சமையல் ரொம்ப நல்லாயிருக்கு.''

ராதா அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் மரியாதைக்காக ஒரு புன்முறுவல் மட்டும் புரிந்தாள்.

''என்ன புஸ்தகம் அது? இவ்வளவு பெரிசா இருக்கே?''

''சாமர்செட் மாம். ஆஃப் ஹ்யூமன் பாண்டேஜ்.''

''இதையெல்லாம் எப்படிப் பொறுமையாக உன்னாலே படிக்க முடியறது ராதா? தௌஸண்ட் பேஜஸுக்கு மேலே இருக்கும் போலிருக்கு?''

''மாம்ஸ் ஸ்டோரீஸ் எல்லாமே எனக்கு ரொம்பப் பிடிக்கும்.''

''மாம் ஒரு பாபுலர் ரைட்டர் தான். ஆனா அவரை ஒரு ஹைக்ளாஸ் லிட்ரரி ரைட்டரா க்ரிடிக்ஸ் ஒத்துண்டதில்லே.''

''நீங்க எகனமிக்ஸ் ப்ரொபசர்தான்னு நினைச்சேன். லிட்ரேசரில் கூட அநாசிட்டி போலிருக்கே'' என்று கிண்டலாக ராதா சிரித்தாள். எதனாலே அவளுக்கு அவனைப் பிடிக்காமல் இருந்தது. இப்பொழுது அவளுடைய ஃபேவரிட் ஆசிரியரான மாமைப் பற்றி அவன் இளக்காரமாகப் பேசவே அவன் மேல் அவளுக்கு இன்னும் வெறுப்பு கூடியது.

''படிக்கறதுக்கு சுவாரசியமா எழுதற வங்கல்லாம் பெரிய ரைட்டர்னு சொல்லிட முடியாதில்லேயா? பெர்னார்ட் ஷா, பெர்ட்ராண்ட் ரஸ்ஸல், ஹெச். ஜி. வெல்ஸ், அய்ன் ராண்ட் இவங்களைப் போல சாமர்செட் மாமைச் சொல்ல முடியுமா?''

''நீங்க சொல்ற ஆதர்ஸ் எழுதினதை நான் படிச்சதும் இல்லே. படிக்கவும் பிடிகாது. தமிழ்லே மாதிரி இங்கிலீஷ்லேயும் சில க.நா.சு.க்கள் இருப்பாங்க போலிருக்கு.''

''சரி, நாம இப்ப இலக்கிய சர்ச்சையிலே இறங்கிட வேண்டாம். கொஞ்ச நேரம் உன்னோட பேசிண்டிருக்கலாம்னு வந்தேன். பேச்சை ஆரம்பிக்கறப்பவே ஒரு 'காண்ட்ர வர்ஸி' வந்துடுத்து.'' என்று அந்தப் பேச்சுக்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்க முயன்றான் நாகு.

ராதாவின் யோசனை வேறு வழியில் செல்லத் தொடங்கியது. நாகு தானாகவே இப்படி தன்னோடு பேசுவதற்காக வந்திருப்பானா அல்லது தன் தகப்பனாரோ, சித்தியோ அவனைத் தூண்டி விட்டு இங்கே அனுப்பி யிருப்பார்களா? எப்படியிருந்தாலும் இதை முளையிலேயே கிள்ளி எறிந்து விடுவது நல்லது என்று ராதாவுக்குத் தோன்றியது. தன் மனத்திலிருப்பதை, ரவியைத் தான் நேசிப்பதை ஏன் நாகுவுக்குச் சொல்லித்தன் பேரில் அவனுக்கு ஏதாவது அபிலாஷை முளைவிட்டிருந்தால் அதை இப்பொழுதே நசுக்கி விடக் கூடாது என்று அவள் நினைத்தாள்.

''நீங்க வந்தது ஒரு விதத்துலே நல்லதாப் போச்சு. எனக்கும் உங்ககிட்ட பேச வேண்டிய விஷயம் இருக்கு'' என்று ராதா துணிந்து பேச்சை ஆரம்பித்து விட்டாள்.

நாகுவின் முகத்தில் ஆச்சரியம். அவன் ஆகிய உணர்ச்சிகள் 'குப்'பென்று படர்வதை அவளால் காண முடிந்தது.

''அப்படியா? ஐ. எம் ஸோ ஹேப்பி! என்ன விஷயம்?''

''என்னோட கல்யாணத்தைப் பத்தி நீங்க அப்பா கிட்ட கேட்டேளில்லையா?''

''ஆமா?''

''அதை எந்த நோக்கத்தோட கேட்டேள்?''

''நோக்கம் ஒன்னும் கிடையாது. சும்மா சாதாரணமான ஒரு மரியாதைக் கேள்வி தான்.''

''தேங்ஸ். நானும் அப்படித்தான் நினைச்சேன். ஆனா அப்பா அதை வேற மாதிரியா புரிஞ்சுண்டுட்டார்.''

''எப்படி?''

''நீங்க என் பேர்லே ஒரு இன்டென்ஷன் வெச்சிருக்கிறதாக. அதாவது என்னைக் கல்யாணம் பண்ணிக்க விரும்பறதாக.''

''நீ பேசறதைப் பார்த்தா உனக்கு அதிலே இஷ்டம் இல்லேன்னு தெரியறது. ஏம் ஐ கரெக்ட்?''

''எக்ஸாட்லி. அதனாலே நீங்க தயவு செய்து எங்கப்பாகிட்ட இது விஷயமா மேற்கொண்டு அவரை என்கரேஜ் பண்ணும்படியா ஒன்னும் பேசாம இருக்கணும்னு கேட்டுக்கறேன்.''

''ஏன் ராதா உனக்கு என் மேலே இவ்வளவு வெறுப்பு?''

''வெறுப்பு இல்லையே. பட் நான் வேற ஒருத்தரை விரும்பறேன். அவரைத்தான் கல்யாணம் பண்ணிக்கிறதாகவும் தீர்மானம் பண்ணிட்டேன். அவரும் என்னையே தான் பண்ணிக்கணும்கிற உறுதியோட இருக்கார்.''

நாகுவின் முகம் இடீரென்று களை இழந்து விட்டது.

அதைக் கவனித்த ராதா, ''நான் உங்க மனசைப் புண்படுத்தும்படியா பேசியிருந்தா என்னை மன்னிச்சுடுங்க. உண்மையை ஆரம்பத்துலேயே சொல்லிடறது நல்லதுன்னு தோணித்து. மேலும் நீங்க என்னைப் புரிஞ்சுண்டு என் விருப்பத்துக்கு இடையூறு வராதபடிக்கு நடந்துப்பேள்ன்ற நம்பிக்கையும் இருந்தது. சந்தர்ப்பம் வர்ற போது இதை உங்ககிட்டே சொல்லிடணும்னு நினைச்சுண்டிருந்தேன். அந்தச் சந்தர்ப்பம் இவ்வளவு சீக்கிரம் தானாகவே கிடைக்கும்னு நான் நினைச்சிருக்கல்லே'' என்றாள்.

''ஓ. கே. ராதா. எனக்குப் புரியறது. நான் உன் சந்தோஷத்துக்குக் குறுக்கே நிற்க மாட்டேன். அதை நீ நம்பலாம். பட் ஐ ஆம் டிஸப்பாயிண்டட். அதைப் பத்திப் பரவாயில்லே. விஷ் யூ ஆல் தி பெஸ்ட்'' என்று கூறி நாகு எழுந்திருந்தான்.

''தாங்க்யூ வெரி மச். ஏன் எழுந்திட்டேள்? வேற விஷயங்களைப் பத்திப் பேசிண்டிருக்கலாமே.''

''இல்லே, நா வரேன். குட் நைட்'' என்று கூறி நாகு அங்கிருந்து அகன்றான். தான் செய்த இந்தக் காரியத்தைப் பற்றித் திருப்தியடைந்த ராதா மறுபடியும் க்ஃபியின் வாழ்க்கைக் கதையைப் படிக்கத் தொடங்கினாள். (தொடரும்)

அவனை அவள் இரண்டாவது முறையாக சந்தித்த போது தன் வசமிழந்து விட்டாள். அவன் ஒரு லட்சாதிபதி என்பது அவர்களுடைய முதல் சந்திப்பின்போது அவளுக்குத் தெரியாது.

- ராமுசாமி



# ரெக்ஸோனா உங்கள் சருமத்தைப் பராமரிக்கிறது...





## மென்மையோடு மெருகுமிளிர வைத்திருக்கிறது.

நாலு இயற்கைத்
தைலங்கள் இணைந்துள்ளன
ரெக்ஸோனாவிலே—ஹபுஷா
(தேவதாரம்), கருவா, கிராம்பு,
சரளம். ரெக்ஸோனாவினால்
குளித்தெழுவீர்—அது உங்கள்
சருமத்தை மென்மையோடு
மெருகு மிளிர வைத்திருக்கிறது.
நெஞ்சம் கவரும் நறுமணமுடன்
நேரமெல்லாம் உங்கள் மீது
மணக்கும் ரெக்ஸோனா, உங்கள்
மேனி அழகைப் பேண
இயற்கையான வழி.




## ரெக்ஸோனா உங்கள் சருமத்திற்கு நல்லது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-RX.77-2014 TM

# சிறைகள்

பர்வதவர்த்தனி



டாக்டரின் முகத்தையே பரிதாபமாகப் பார்த்தாள் வித்யா. அருகே உட்கார்ந்திருந்த அண்ணனையும் அண்ணியையும் திரும்பத் திரும்பப் பார்த்தாள்.

உணர்ச்சிகள் மரத்துப் போன கிட்டத்தட்ட மோன நிலையில் அவர்கள் இருவரும் உட்கார்ந்திருந்தார்கள்.

வித்யாவின் மனம்தான் அறுந்த பல்லி வாலாகத் துடித்தது.

நாற்காலிக்கருகே கீழே தரையில் இரண்டு கைகளையும் கொட்டிக் கொண்டு ஒன்றுமே புரியாமல் உட்கார்ந்திருந்தது குழந்தை—

அதற்கு இப்போது வயது பத்து!

என்ன காரணமோ அதற்கு மன வளர்ச்சி இல்லை. எட்டு மாதக் குழந்தை தவழ்வது போல் தவழ்ந்து கொண்டிருந்தது.

''அப்போ நீங்க முடிவாக என்ன சொல்றீங்க?''

வித்யாதான் மறுபடியும் கேட்டாள்.

''அம்மா! நானும் இந்தக் குழந்தைக்கு எட்டு வருஷமா வைத்தியம் செய்கிறேன். ஆபரேஷனைத் தவிர வேறே வழியே இல்லே. மூளையில் ஆபரேஷன். கொஞ்சம் பெரிய ஆபரேஷன்தான்!''

நாற்காலியின் கையை இறுகப் பற்றினாள் வித்யா.

''வேறே வழியே இல்லையா?''

''நிச்சயமாக இல்லே. இதுவோ பெண் குழந்தை. மூளையைத் தவிர மற்ற அங்க வளர்ச்சி எதுவும் பாதிக்கப்படவில்லே. ஆகவே ஆபரேஷன் செய்து பார்த்தால் நல்லது.''

டாக்டர் எதைச் சொல்கிறார் என்று வித்யா புரிந்து கொண்டாள்.

''அண்ணா! ஆபரேஷனுக்கு ஒப்புக் கொள்.''

அண்ணா பதில் சொல்லவில்லே. அண்ணியைப் பார்த்தான்.

''நமக்கு அதிர்ஷ்டமிருந்தால் குழந்தைக்கு நல்லபடி ஆகட்டும். தைரியமா இரு!''

வெளியே வந்தார்கள்.

வழியில் அண்ணா பேசினான்.

''வித்யா....''

கண்ணைத் துடைத்துக் கொண்ட வித்யா நிமிர்ந்து பார்த்தாள்.

''அடுத்த ஜென்மத்திலே உனக்குச்செருப்பாக வந்து உழைக்கிறேன்!'' என்றான்.

''எதுக்காக இப்படியெல்லாம் பேசறே நீ?''

''இந்தக் குழந்தைக்காக நீ படுகிற கஷ்டமிருக்கே ... அதுக்கு ஈடு இணையே கிடையாது. இதுக்கு வைத்தியச் செலவுக்குப் பணம் வேணும்னே அவளும் ஆபீஸ் போக ஆரம்பிச்சிட்டா. எப்போது பார்த்தாலும் நீ குழந்தையைப் பார்த்துட்டு வீட்டோடு இருக்கே. ஆறு வருஷமாச்சு நீயும் உன் புருஷனை விட்டு வந்து....! கிட்டத்தட்ட ஜெயில் வாசம்தான் உனக்கு!''

''அண்ணா, என் மனசிலே இப்போ முழுசாக நெறைஞ்சு கிடக்கிறது இந்தக் கஷ்டம் ஒன்னுதான். அவரையோ அவர் என்னோட வாழ மறுத்து என்னை அனுப்பிட்டதையோ நான் எப்பொழுதோ மறந்துட்டேன்....''

இதைக் கேட்டதும் அண்ணா விரக்தியாகச் சூள் கொட்டியவாறு அவள் கழுத்தைப் பார்த்தான்.

''என்ன பார்க்கிறே? இதோ தொங்கறதே இந்த மஞ்சள் கயிற்றையா? இந்தக் கயிற்றிலேயிருந்து. இதில் கோத்திருக்கிற தங்கம் வரை எல்லாமே அப்பா காசு கொடுத்து வாங்கியது. கேவலம், நாம் செய்த செலவில் தன் கையால் கழுத்தில் மாட்டியதைத் தவிர அவருக்கு வேறே பாத்தியம் கிடையாது இதில்....''

''என்னாலேதான் உனக்கு இந்தக் கஷ்டம்? எனக்கொரு குழந்தை இப்படியிருக்கிறதென்பதாலேதானே உன்னை வீட்டுக்கனுப்பி வேடிக்கை பார்க்கிறார் உன் புருஷன்!''

''இதோ பார்..... நானே மறந்து போய் விட்ட விஷயங்களையெல்லாம் திரும்பத் திரும்பக் கிளறாதே. எனக்கிருக்கிற ஒரே கவலே இந்தக் குழந்தைக்கு நல்லபடியாகணுமே என்பதுதான். தெரிகிறதா?''

அண்ணா பேசவில்லே. மௌனமானான்.

தியேட்டருக்குள் குழந்தையை அழைத்துப் போக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன.

ஸ்ட்ரெச்சர் வந்து விட்டது.

பொங்கி வருகிற துக்கத்தை அடக்கமுயற்சி செய்து கொண்டிருந்தாள் வித்யா.

அண்ணாவும் அண்ணியும் குழந்தையின் தலைமாட்டில் நின்றார்கள்.

குழந்தையை அழைத்துப் போனார்கள்.

தியேட்டர் கதவு வரை கூடப் போனவர்கள் வெளியே வந்து பெஞ்ச் மீது உட்கார்ந்தார்கள்.

கதவு மூடிக் கொண்டது.

அன்னம் கண்ணை மூடிக் கொண்டு கடவுளிடம் கெஞ்சினாள். திடீரென்று எழுந்து நின்றாள் வித்யா.

எதிரே —

அவளுடைய கணவன் ராமன் நின்று கொண்டிருந்தான்.

''குழந்தையை தியேட்டருக்குக் கொண்டு போய் விட்டார்களா?''

வித்யா பதில் கூறாமல் நின்றாள்.

அண்ணா எழுந்து வந்து அவனை வரவேற்றுப் பதிலும் சொன்னான்: ''ஆமாம்; இப்போ தான்..... நீங்க இன்னும் கொஞ்ச நேரம் முந்தி வந்திருந்தா பார்த்திருக்கலாம்.''

''இதுபோல எதனாலே மூளை வளர்ச்சியெல்லாம் பாதிக்கப் படுது?''

''எத்தனையோ காரணம். உம். நெருங்கின உறவில் கல்யாணம் செய்து கொண்டது கூட இருக்கலாம் என்கிறார்கள்!''

''அப்படியா!''

''நான் சாயங்காலம் போஸ்ட் ஆபரேடிவ் வார்டில் வந்து பார்க்கிறேன்.''

''வேண்டாம். உடம்பைப் பார்த்துக்குங்க. டாக்டர் என்ன சொன்னார்?''

''சொல்வதென்ன? ஹார்ட் வீக்தான். தொடர்ந்து வைத்தியம் செய்து கொள்ளணுமாம்!...''

''யாருக்கு? உங்களுக்கா?'' — வித்யாவால் இதற்கு மேலும் அமைதியாக இருக்க முடியவில்லை. கேட்டு விட்டாள்.

''ஆமாம். விவரமாக அப்புறம் சொல்றேன்! வரேன்! நிற்க முடியவில்லை!''

அவன் நடந்தான்.

வித்யா அண்ணாவைக் கேட்டாள்: ''யார் இவருக்கு ஆபரேஷன்னு சேதி சொன்னது?''

''நான்தான். நேற்று டாக்டரைப் பார்க்க வந்த போது இவரைப் பார்த்தேன். தமக்கு ஹார்ட் வீக்னு சொன்னார்!''

''இந்த நேரத்தில் இவரைப் பார்த்தது மனசுக்குச் சங்கடமாயிருக்கு. ஒரு நல்ல மனிதரை வரச் சொல்லியிருக்கக்கூடாதா!''

திடீரென்று தியேட்டர் கதவு திறந்தது.

அண்ணா ஓடினான்.

''வித்யா!''

அண்ணா கூப்பிட்டான்.

குழந்தையின் படத்தையே வெறித்துப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்த வித்யா பதிலேதும் சொல்லவில்லை.

''வித்யா.... இன்னும் எதுக்கு அழுதிட்டு உட்கார்ந்திருக்கே? நாம் கொடுத்து வச்சது அவ்வளவுதான்!''

''நான் ரொம்ப நம்பிக்கையா இருந்தேன்.''

''டாக்டரே நம்பிக்கையாத்தான் இருந்தார்...''

''....''

''ஒரு சமாசாரம். நீ உங்க வீட்டுக்குப் போகணும்னு நெனைக்கிறயா? அன்னிக்கு ராமனைப் பார்த்த போது அவருக்கும் அப்படி ஓர் ஆசை இருக்கும்னு எனக்குப் பட்டது!''

''அண்ணா!'' — கத்தினாள் வித்யா.

''சொல்லும்மா!''

''அதை மட்டும் சொல்லாதே. நான் போக மாட்டேன். நீங்க ரெண்டு பேரும் ஆபீஸ் போய் வாங்க. நான் வீட்டைப் பார்த்துக்கிறேன். சமைச்சுப் போடறேன்.''

''உம் .... முன்னேயாவது குழந்தையைக் கவனிக்கிறோம்கிற ஆறுதல் உனக்கு இருந்தது இப்போ...''

''அண்ணா ... தயவு செய்து என்னைக் கட்டாயப்படுத்தாதே!''

அன்னம் அருகே வந்து நின்றாள்.

''எதுக்காக வித்யாவிடம் தர்க்கம் செய்யறீங்க? பேசாம போங்க'' என்றாள்.

அண்ணா நகர்ந்தான்.





பேச்சாளர்: அங்கே பொது மக்கள் எல்லோரும் மழையில் நனைஞ்சுக்கிட்டே என் பேச்சைக் கேட்டுக்கிட்டு நிக்கும்போது எனக்கு மட்டும் எதுக்குப்பா குடை பிடிக்கிறே?... வேண்டாம் சார்!

மைக் செட்காரர்: உங்களுக்காக நான் பிடிக்கலே! என் புது மைக் நனைஞ்சு வீணாப் போயிடக் கூடாதுன்னு தான்! - இராஜாமணாளன்

"அண்ணி .... தயவு செய்து இதைமட்டும் சொல்லாதீங்க நீங்களும். வெட்கத்தை விட்டுச் சொல்றேன். சேர்ந்தாற் போல ஒரு மாசம் கூட நான் அவரோட வாழலே. அடிக்க விரட்டாத குறையாக உங்க குழந்தையை ஒரு காரணம் காட்டி என்னைத் தள்ளி வச்சிட்டார். அந்தக் குழந்தை பேரில் என் உயிரையே வச்சேன் ஆனா நான் கொடுத்து வைக்கலே, இப்போ. இதய நோயாலே அவதிப்படுகிற போது நான் அவரோடு போய்த் தங்கணுமா? வாழப் போவ என் இதயத்திலே சுட்டியாலே குத்திலவரோடு இப்போ நான் போய் வாழணுமா? முடியாது! இத்தனை நாள் அண்ணு சொல்வான் குழந்தையைப் பார்த்துக் கொள்கிற பெயரில் நீ ஜெயில் வாசம்தான் அனுபவிக்கிறேன்னு! இப்போ அந்த ஜெயில் லேருந்து விடுதலை கிடைச்ச சமயத்தில் இன்னொரு ஜெயிலில் என்னைத் தள்ள முயற்சி செய்யாதீங்க.... ப்ளீஸ்!"

அண்ணி அவள் தோளை வருடினாள்.

"வித்யா ... நீ செய்திருக்கிற முடிவு நல்ல முடிவுதான். நோய் வாய்ப்பட்டிருக்கிற அவருக்குப் பணிவிடை செய்ய ஒருத்தி தேவைப்படுகிற சமயத்தில் உன்னை அவர் ஏற்றாலும் ஏற்கலாம் .... ஆனால் அது புலி வாயிலிருந்து தப்பி நெருப்பில் விழுவதைப் போலத்தான். இதயமே இல்லாத அந்த மனிதனுக்கு இதய நோய் வந்த பிறகு உன் நினைப்பு வருதாமோ? எப்படியோ உனக்கு மனசில் நீங்காத துயரம். உன்னைப் பொறுத்த வரைக்கும் ஜெயில் என்கிறது வெளியிலே இல்லே. வெறுப்பும் ஏமாற்றமும் துயரமும் விரக்தியும் நிறைஞ்சு போயிருக்கிற உன் மனசே உன்னை அடைச்சு வச்சிருக்கிற ஒரு சிறைதான் ... வெளியாருக்கு இதெல்லாம் புரியாது. அனுபவிக்கிற உனக்குத் தான் தெரியும்....."

கோடையில் திரள்கிற மேகமாய் இருந்தன அண்ணியின் வார்த்தைகள்!

ஆஸ்திக மனைவிக்கு நாஸ்திகக் கணவன். குடும்பத்தில் ஏற்படும் விபரீதச்சம்பவங்களால் நாஸ்திகன் ஆஸ்திகனாகி விடுகிறான். இவ்வளவு தான் திரைக்கதை. ஆனால் படத் தயாரிப்பாளர்கள் இந்தச் சின்னக் கதையை வைத்துக் கொண்டு எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு நம் பொறுமையைச் சோதித்து விட்டார்கள். அடடா! என்ன சாதனை!

புன்னகை அரசி கே.ஆர். விஜயா நவரசத் திலகம் முத்துராமன் இருவரும் இணைந்து நடித்தும் படத்தைக் காப்பாற்ற முடியவில்லை. பாலைவனத்தில் பொழிந்த பால் நிலவு.

இந்த மாதிரி படங்கள் வருவதனால் இருக்கிற தெய்வ நம்பிக்கைக்கும் ஆபத்து வந்து விடும்.

படம் கெட்டகேட்டுக்கு நான்குபாடல்கள்!

ஒய். ஜி. மகேந்திரனின் காமெடி ஒரே அறுவை! கன்னட மொழியை வார்த்தைக்கு வார்த்தை கிண்டல் பண்ணி எல்லோரையும் சிரிக்க வைக்கப் பார்க்கிறார். அவருக்கு நம் அனுதாபங்கள்.

மகேந்திரனோடு இணைந்து நடிக்கும் சங்கர லக்ஷ்மி பரவாயில்லை. 'வே' என்று விழித்து, நறுக்கென்று பேசிக் குபுக்கென்று சிரிக்க வைக்கிறார்.

மேஜர் சுந்தரராஜன் சாமியாராக வந்து தத்துவம் பேசுகிறார். ஒரே காட்சியில்தான்! அப்புறம் சித்தியாகி விடுகிறார். அவர் எதற்காக வந்தார் என்பது அவருக்காவது தெரிந்தால் சரி! வண்ணப் படத்தின் தலைப்பு நன்றாயிருக்கிறது!

—கார்த்தன்



# பாலாஜி சீறுகிறார்!



"நான் இனிப் படங்களில் வில்லனாக நடிக்க மாட்டேன். தர்மராஜாதான் நான் வில்லனாக நடித்து வெளி வந்திருக்கும் கடைசிப் படம்" என்று கூறும் பாலாஜி காரணங்களை அடுக்குகிறார்:

"வில்லனாக நடித்தால் கற்பழிப்புக் காட்சிகளில் நடிக்க வேண்டியிருக்கிறது. என் பிள்ளைகளோ "அப்பாவுக்கு இதெல்லாம் தேவையா?" என்று கேட்கிறார்கள்! மற்றொன்று: "மேக்கப்பைப் போட்டுக்கொண்டு காட்சியே இல்லாமல் மௌனமாக உட்கார்ந்திருக்க என்னால் முடியாது. உதாரணமாக தர்மராஜா படத்திற்காக ஜப்பானில் 25 நாள் கால்ஷீட் என்னிடம் கேட்டிருந்தார்கள். நானும் கொடுத்திருந்தேன். சிவாஜி அவர்களின் வற்புறுத்தலினால் ஒப்புக்கொண்டேன். கிளம்புவதற்கு முன் என் மனைவிக்கு இங்கு ஒரு ஆபரேஷன் நடந்திருந்தது. அதுமட்டுமல்லாமல் ஹிந்தி 'அமர்தீப்' வெளியிடும் நாளும் நெருக்கத்திலிருந்தது. "இரு காரணங்களுக்காகவும் நான் இங்கு இருக்க வேண்டியுள்ளது. இரண்டையுமே ஒரு சேர முடித்துக்கொண்டு வந்து விடுகிறேன்" என்றேன். ஆனால் படத் தயாரிப்பாளர்களோ 'நீங்கள் வராவிட்டால் எல்லா திட்டங்களும் குளறுபடியாகும்' என்றார்கள். கொடுத்த வாக்குக்குக் கட்டுப்பட்டு அவர்களுடன் சென்றேன். நான் அங்கு இருந்த 25 நாளில் என்னை அவர்கள் உபயோகப்படுத்தியது ஐந்தே நாட்கள்தான்!

"இப்படி நடப்பது எதனால் தெரியுமா? எதுவுமே முன்கூட்டித் திட்டமிடாமல் ஜப்பானில் இறங்கிப் படமெடுக்க ஆரம்பித்ததால் தான். எல்லாமே கச்சிதப்படுத்தியிருந்தால் யார் யார் எப்பொழுது எந்தெந்த காட்சிக்கு என்று தெரியுமல்லவா? இதையெல்லாம் பார்த்துத்தான் வில்லன் வேடங்களில் நடிப்பதில்லை. ஹிந்தித் திரைப்படங்களில் பிரானைப் போல் இனி குணசித்திர வேடங்களில் மட்டுமே நடிப்பது என்று முடிவு செய்தேன். அதுவும் நல்ல தயாரிப்பாளர்கள் கிடைத்து 9 லிருந்து 6 மணிக்குள் என் காட்சிகளை எடுத்துக் கொண்டு என்னைக் காக்க வைக்காமல் அனுப்புவதானால் மட்டுமே நடிக்க ஒப்புக் கொள்வது என்று தீர்மானித்துள்ளேன். இதன் விளைவாக சிவாஜி அவர்களே வில்லனாக ஆறு படங்களிலே நடிக்க எனக்குச் சான்ஸ் கொடுத்தும் நான் மாட்டேன் என்று சொல்ல, "பெரிய ஆளாயிட்டேப்பா" என்று கிண்டலாகக் கூறினார். இப்படி மறுத்ததால் மூன்று லட்ச ரூபாய் வருமானத்தை இழந்ததை நான் பொருட்படுத்தவில்லை!

"நடிப்பதற்கில்லை என்று சொல்ல இன்னொரு வழியும் கண்டு பிடித்திருக்கிறேன். அதுதான் தாடி வளர்ப்பது! எந்தக் காரணத்தை முன்னிட்டும் தாடியை நான் எடுப்பதாயில்லை. சமீபத்தில் கூட தெலுங்கு நடிகர் கிருஷ்ணாவின் படத்தில் நடிக்க அழைத்தார்கள். அது ஒரு போலீஸ் ஸூப்பரின்டெண்ட் வேடம். தாடியை எடுப்பதற்கில்லை என்று கூறித் தப்பித்துக் கொண்டேன்!"

பேட்டி: சலன்

நாகரீகத்தின் தலைநகரான பாரிஸில்
அறிமுகமாகியிருந்தால், எங்கள் புதிய வொர்ஸ்டட் சூட்டிங்
'லார்ட் வெஸ்ட்' என்றே அழைக்கப் பட்டிருக்கும்.



® is the registered trademark of Reliance Textile Industries Ltd.

'அன்புள்ள அப்பாவுக்கு!
இப்பவும் நீங்கள்......'

ஒன்று மாற்றி ஒன்று கடிதங்கள். ஒவ்வொரு பிள்ளையும் கூப்பிடுகிறான். ஒவ்வொரு பெண்ணும். 'தெண்டனிட்ட விஞ்ஞாபனம் என்று தொடங்கி, 'என்னப்பா சொல்றீங்க?' என்று யோசனை கூறி முடிவைக்கேட்கிறார்கள்.

அவருக்குத் தெளிவாய்ப் புரிய ஆரம்பிக்கிறது.

'எனக்கு ஒரு நிழல் தேவை.'

ஆல மரமாய் நின்று எல்லோருக்கும் நிழல் தந்து ஆதரித்த உடம்பு இப்போது பட்ட மரமாய்த் திகழ்ந்து தனக்கொரு நிழலுக்காய் ஒதுங்குகிற மாதிரி ஒரு சுய சிந்தனையின் பாதிப்பு.

மேசை மீது அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் கடிதங்களைப் பார்க்கிறார். 'ஏன் இப்படி பதில் எழுதத் தோன்றாமல் போயிற்று? குழந்தைகள் என்ன நினைத்துக் கொள்வார்கள்? '

ஒரு முடிவுக்கு வராமல் என்னவென்று எழுதுவது?

ஜானகியைப் பார்க்கிறார். அவள் அதே அழகோடு இன்னும் சிரித்துக் கொண்டுதான் இருந்தாள். அருகே சென்றார். அந்தப் படத்தைக் கையிலெடுத்து வைத்துக் கொண்டார்.

'மாமா! அண்டாவில் வெந்நீர் நிரப்பி வச்சிருக்கேன். குளிச்சிட்டு வந்தேன்னு சாப்பிடலாம். சமையல் ஆயிடுத்து....''

மருமகன்களின் பணிவான உபசரிப்பின் சம்பிரதாய நிழல்களா?

இல்லை.

ஓர் ஆத்மார்த்தமான நிழல். அது அவரோடு பேச வேண்டும். முன்னும் பின்னும் நீண்டு விரியாமல் அவரைச் சுற்றி ஒரு வட்டமாய் அமைந்திருக்கும் நிழல். அவருக்கு அடிமையாகிப் போகிற நிழல். அவரை அடிமைப்படுத்துகிற நிழல்.

அடிமை எப்படி அடிமைப்படுத்த முடியும்?

கோணலாகிப் போன மனசின் கிறுக்கல்களாய் என்னென்னவோ புரியாத எழுத்துக்கள். படிக்கிறார். பொருள் விளங்கவில்லை. பொருள் புரியும் என நினைத்தாலோ, படிக்க முடியாமல் தண்ணீர் சிந்திச் சிதைந்து போன மாதிரி ஆகிவிடும் எழுத்துக்கள்.

'ஜானகி! எதைச் சாதிச்சிட்டதா நினைச்சு இப்படிச் சிரிச்சிண்டிருக்கே?....'

ஒரு வருஷத்துக்கு முன்; ஒரு வெள்ளிக் கிழமை காலை.

''ஏன்னா! அடுப்பில பாலை வச்சிருக்கேன். பார்த்துக்கறேளா? போய்க் குளிச்சிட்டு வந்திடறேன்....''

# ஒரு மரம் நிழலைத் தேடுகிறது

## "விநோதானந்த்"



வயிற்றில் ஏதோ சங்கடம் சவலைப்பிள்ளையாய் உருள்கிறது.

அந்தச் சங்கடம் இப்போது வயிற்றில் மட்டுமா இருக்கிறது?

உட்கார்ந்து எழுந்தால் கண்களை இருட்டுகிறது. 'ப்ளட் ப்ரஷராக இருக்குமோ? இனிமேல் இந்த உடம்போடு சிநேகம் பிடித்துக் கொள்ள இது மாதிரியான வியாதிகளெல்லாம் வரலாம்!''

''சுவாமிக்கு இன்னைக்கு என்ன நிவேதனை பண்ணட்டும்?''

சமையற்காரரின் குரல். வெற்றிலை போட்டுப் போட்டுத் தடித்த நாக்கு மேலண்ணத்தில் ஒட்டியும், சுருண்டும், மடங்கியும் வெளிப்படுத்தும் கேள்விகள். கரகரத்துப் போன அந்தக் குரலைக் கேட்டுக் கேட்டு அவருக்கு அலுத்து விட்டது.

'எனக்கு ஒரு நிழல் வேண்டும். அது எப்படிப்பட்ட நிழலாய் இருக்க வேண்டும்?'

'மாமா! காப்பி கலந்திண்டு வரவா?'

சென்றவன் பத்து பதினைந்து என்று நிமிடங்கள் கரையக் கரைய.....

பொங்கி வந்த பாலை ஸ்டவ்வை அணைத்து அடக்கி விட்டுக் குளியலறைக்கு வந்தார்.

''ஏண்டி! குளிக்கறயா? இல்லே, தொட்டியிலே தண்ணீரை நிரப்பி நீச்சல் அடிச்சிண்டிருக்கியா?''...

பதிலில்லை. கதவைத் திறக்கிறார்.

ஜானகி நிலத்தில் கிடக்கிறாள்!

தரையில் இழைத்து முகத்தில் தடவியிருந்த மஞ்சளின் புனித நீரோட்டம் அவரைப் பார்த்துச் சிரிக்கிறது. பதறிய மனசின் சிதறல்களை உள்ளுக்குள்ளேயே தக்க வைத்துக் கொண்டு அவளை நெருங்கிக் குனிந்தார். சுவாசம் படுத்து விட்டது தெரிந்தது.

வாய்விட்டு அழத் தெரியாதவர். துக்கத்தை ஒரு மௌனத்தில் தேக்க வைத்துக் கொண்டு, அவளைச்சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு உள்ளே வந்தார். கட்டத்தில் நீளமாகப் படுக்க வைத்தார்.

மாலையில் அவருடைய அலுவலகமே அங்கு திரண்டு விட்டது. அனுதாபங்கள் தமிழும், ஆங்கிலமுமாய்த் தரையிறங்கி அவளுக்கு அஞ்சலி செலுத்தின.

“என்னப்பா செய்யப் போறேள்? வேலையை ராஜினாமா பண்ணிட்டு என்னோட வந்திருங்களேன்.....”

“அப்பா! உங்களைத் தனியா விட்டுட்டுப் போக மனசு கேக்கல்லே. இனிமே நீங்க வேலை பார்த்து ஆகணும்னு என்ன கட்டாயம் மீறி மீறிப் போனா இன்னும் ரெண்டு வருஷமோ, மூன்று வருஷமோ ... ரிடையராகி விடுவேள். அதை இப்பவே செஞ்சிடுங்கோ.”

பிள்ளைகளும், பெண்களும் மாறி மாறிப் பேசிய பேச்சில் பாச மருக்கொழுந்தின் மணம்.

ஆராமுவதன் பிடிவாதமாய் மறுத்து விட்டார்.

ஊருக்குப் புறப்படு முன் ராகவன் கொண்டு வந்து மாட்டிய பெரிய அளவு புகைப்படத்தில் தனக்குப் பிடித்த அரக்குக் கலர் புடவையை உடுத்திக் கொண்டு, வெள்ளையும் கறுப்புமாய் இழை பின்னி ஆடிய கூந்தலைப் படியப்படிய வாரிக் கொண்டு, பொறுக்காக, அளவில் குங்குமத்தை இட்டுக் கொண்டு, கண்கள், இதழ்கள் என்று எங்கும் புன்னகையைப் புகை நிழலாய்ப் படிய விட்டுக்கொண்டு பார்க்கிற பார்வையிலேயே அவரைப் பைத்தியமாய் அடித்துக் கொண்டிருந்தாள்.

‘இருடி ... எல்லாரும் ஊருக்குப் போகட்டும். உன்னை என்னவெல்லாம் கேட்கிறேன், பார். உன் பேச்சு, சிரிப்பு எல்லாம் போலி. நீ ஒரு ராட்சசி. இல்லாத போனா, ‘இவன் எப்படியோ போறான்னு....’

அந்த ஊமை அழுகை யாருக்குக் கேட்கப் போகிறது?

“அப்பா! ஒரு சமையற்காரரை ஏற்பாடு பண்ணியிருக்கேன். நீங்கதான் எங்கேயும் வரதுக்கில்லேன்னு தீர்மானமா சொல்லிட்டேள். கொஞ்ச நாள் பாருங்கோ. அசௌகரியமாகத் தோணித்துன்னு புறப்பட்டு வந்திடுங்கோ. அடிக்கடி கடுதாசு போடுங்கோ.”

பையன்கள்தான் ஊமையாய்ப் பேசுகிறார்கள்.



பேச்சின் இதத்தில் பனிமுத்துப் பதிந்த பசும்புல் தரையில் அடியொற்றி நடப்பது மாதிரி இருந்தது.

''ஒவ்வொண்ணையும் ஆர அமர யோசிச்சு ரத்தினமாகத்தான் பெத்திருக்கே!....''

**வா**சலில் டாக்ஸி வந்து நிற்கிறது.

நாராயணன் இறங்குகிறான்.

கடைசிப் பிள்ளை. அம்மா செல்லம். பத்து வயசு வரைக்கும் சோற்றைப் பிசைந்து ஊட்டினாள். எண்ணெய் தேய்த்து விட்டாள். தலை சீவிக் கொள்ளவும் தெரியாது. பச்சைக் குழந்தையாய் அவள் மடியில் படுத்துக் கிடப்பான்.

அவனுக்கு அவன் மேல் உயிர். அவனுக்கும் அப்படித்தான். அவன் மனசு துடித்தால் இவனுடைய கண்களில் தெரியும். அவனுக்குக் கால் வலித்தால் இவன் நொண்டியடிப்பான்.

''என்னடா திடீர்னு கிளம்பி வந்திருக்கே?''

''ஒன்னுமில்லேப்பா. பார்க்கணும்போல இருந்தது.....''

அவரைப் பார்க்கிறான். உடம்பு கொஞ்சம் கரைந்திருப்பது அவனுக்குத் தெரிகிறது.

சமையற்காரர் காப்பியுடன் வந்தார்.

''அப்பா சரியா சாப்பிடறதில்லே. நாக்கு ருசியை ஒதுக்க ஆரம்பிச்சிடுத்து....''

தனிமையில் அவனிடம் சொல்கிறார்.

''உடம்புக்கு அடிக்கடி ஏதாவது தொந்திரவா?''

''அப்படி ஒன்னுமில்லே. உங்க அம்மாவோட பிரிவைத்தான் அவரால் தாங்கிக்க முடியலே. ரெண்டு வருஷம் ஆயிடுத்து. அறைக்குள்ள புகுந்துண்டு கதவைத் தாள் போட்டிண்டு வெளியே வர மாட்டேன்னு அவர் பிடிவாதம் பிடிக்கிற மாதிரி நினைச்சு உருகறார். படத்துல இருக்கற உங்க அம்மா கீழே உசிரோட இறங்கி வரணும். அப்பத்தான் அவருக்கு மனசு ஆறும்....''

சொல்லி விட்டுச் சமையல் வேலையைக் கவனிக்கப் போய் விட்டார்.

நாராயணன் செய்தித் தாளைக் கையிலெடுத்துக் கொண்டான்.

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

''டாக்டர், என் நாய்க்கு அதன் வாலை ஒட்ட நறுக்கி விடுங்கள்!''

''ஏம்மா?''

''நாளைக்கு என் மாமியார் வரப்போறாங்க. அவங்களுக்கு யாரும் எந்தவித மரியாதையும் காட்டக்கூடாது...அதனால்தான்!'' - ராமுசாமி



''என்னடா ஊரில எல்லாரும் சௌக்கியமா? பெரியவன்கள் கிட்டேருந்து லெட்டர் வரதா?''

''வரதுப்பா''

''எத்தனை நாள் லீவு போட்டிருக்கே?''

''ரெண்டே நாள்தாம்பா நாளைக்கே புறப்படணும்.''

''அவ்வளவு அவசரம் என்னடா?''

''உங்களை அழைச்சிண்டு போகத்தான் வந்தேன்.''

அவர் பேச நினைத்தார். முடியவில்லை. நாராயணனின் குணம் அவருக்குத் தெரியும். தன்னைவிடப் பிடிவாதக்காரன் என்பது புரியும். விடாப்பிடியாய் நின்று சாதித்துக் கொள்ளும் சாமர்த்தியம் சிறு வயதிலேயே உடலோடு ஒட்டிக் கொண்டு விட்ட ஒன்று. எந்த வாதப் பிரதிவாதங்களும் முடிவில் அவனுக்குச் சாதகமாய்த் தீர்ப்பு எழுதக்கூடிய நிலையில்தான் முடியும் என்று அவர் உணர்ந்திருந்தார்.

**வீ**ட்டைக் காலி செய்துவிட்டுப் புறப்பட்டாயிற்று.

அவளுடைய படத்தை ஒரு வெள்ளைத்துணியில் சுற்றித் தம் பெட்டியில் பத்திரமாய் வைத்துக் கொண்டார்.

அக்கம் பக்கமெல்லாம் அவரை வணங்கி எழுந்தன.

''பிறந்த ஊரை விட்டுப் போறேன், பழகின மனுஷாளை விட்டுப் போறேன். இதுல எங்களுக்குத்தான் இழப்பு....''

ஒரே ரீதியிலான பேச்சுக்கள் வெவ்வேறு ஏற்ற இறக்கங்களோடு, வெவ்வேறு சுருதியில், வெவ்வேறு தொனியில், வெவ்வேறு ராகங்களாய்.

தெருவில் இறங்கியவர் திரும்பிப் பார்த்தார்.

அவளுடன் முப்பது வருஷம் இணைந்து, இரண்டறக் கலந்து இல்லறம் நடத்திய வீடு. வெளியில் பெரிதாகத் தொங்கும் பூட்டு.

'இந்த வீட்டுக்கு மட்டும் ஐம்புலன்கள் இருந்திருந்தால்? ... கதறிக் கொண்டு ஓடி வருமே....!''

ஓர் அசையாப் பொருளுக்குச் செயற்கை சுவாசம் கொடுத்துப் பார்த்தார்.

நினைப்பே வேடிக்கையாகத்தான் இருந்தது.

**''வா**ங்க, மாமா!.....''

வாய் நிறைய வரவேற்றாள், சாருமதி. நாராயணனின் மனைவி.

முழுகாமல் இருந்தாள்.

தாய்மைப் பேற்றின் பூரிப்பில் மேனியெல்லாம் பொன் வண்ணம் பரவி மோகனச் சித்திரம் எழுதிக் கொண்டிருந்தது.

''எப்படியம்மா இருக்கே? ஊரில உங்க மனுஷாளெல்லாம் சௌக்கியமாஇருக்காளா?''

கேட்டுக் கொண்டே உள்ளே வந்தார்.

வீடு வசதியாகத்தான் இருந்தது. ஆனால் ஏதோ ஆயுள் தண்டனைக் கைதியாய் ஒரு காராக்கிரகத்துக்குள் பிரவேசித்திருக்கிறாற் போல் இருந்தது. சொந்த ஊரைவிட்டு, பழகிய மனிதர்களை விட்டு, இனிப்பாக வாழ்ந்த காலத்தை நினைவில் ஒட்டித் திருப்

# புதிய பிலிப்ஸ் ஸ்கிப்பர் FM

## காலத்தை வெல்லும் பாண்டு இணைந்தது







**இன்று SW மற்றும் MW ஆகியவற்றின் ஒலி நயத்தை உச்சநிலைக்கு உயர்த்துவது FM**

புதிய ஸ்கிப்பர் FM-ல் உள்ள FM பாண்டு மற்றும் இயக்கத்தை ஊக்குவிக்கும் ஆடியோ-ஸர்க்யூட்ரி ஆகியவை SW மற்றும் MW ஆகியவற்றின் உரத்த தெளிவான ஒலி நயத்திற்கு உதவுகின்றன. ஒரு 15 செ. மீ.x10 செ. மீ. முட்டைவடிவ, உயர்ந்த செயல் திறனுடைய லவுட் ஸ்பீக்கர், ஒலித்திறனுக்கென உன்னதமாக அமைக்கப்பட்ட அழகிய காபினெட்.

முன்னேற்றமுடைய அம்சங்கள் :

- உங்கள் டேப் ரெக்கார்டர்/ரெக்கார்டு ப்ளேயர் ஆகியவற்றின் ஒலித் திறனை அதிகரிக்க சக்திவாய்ந்த ஆடியோ ஆம்ப்ளிஃபயர்.
- வசதியான டேப்-இன் அமைப்பு.
- உள்ளிணைக்கப்பட்ட மூன்று ஏரியல்கள், ஒரு டெலெஸ்கோபிக் ஆன்டென்னு.

ஸ்கிப்பர் FM மின்சார மாடலும் கிடைக்கிறது. மின்சாரத்தில் தடங்கல் ஏற்பட்டால் பாட்டரிக்கு தானாகவே மாற்றிக்கொள்ளும் வகையில் இதில் எலக்ட்ரோமேடிக் ஸ்விட்ச் ஓவர் உள்ளது.

**தெளிவான ஒலிநயத்தை FM மூலம் கேட்டு மகிழ முடியும்**

FM ஒலிபரப்பு தொடங்கிவிட்டால் TV செட்டில் கேட்பது போன்ற உயர்ந்த தெளிவான ஒலிநயத்தை கேட்டு மகிழ முடியும்.

FM என்றால் என்ன ?

FM அல்லது 'ஃப்ரீக்குவென்ஸி மாடுலேஷன்' ஒலிபரப்பில் ஃப்ரீக்குவென்ஸி கேரியருக்குள்ளடங்கி ஒலி பரவுகிறது மேலும் தேவையற்ற இரைச்சலைத் தடுக்கிறது. (தற்போதைய AM அல்லது 'ஆம்ப்ளிடியூட் மாடுலேஷன்' ஒலிபரப்பில் கேரியருக்கு மேலாக ஒலி பரவுவதால் இரைச்சலே ஒரு பெரிய இடையூறாகிறது). மோனோ மற்றும் ஸ்டீரியோ ஒலிபரப்பில் உயர்ந்த தெளிவான ஒலிக்கு உதவுவது FM !

தேர்ந்தெடுக்க 2 மாடல்கள் :

15 RL 557 ரூ. 780*
15 RL 558 ரூ. 855* (மின்சார மாடல்)

* சில்லறை விற்பனை உச்ச விலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது. மாநில விற்பனை வரி மேலும் இதர தல வரிகள் தனி.

**பிலிப்ஸ்**

இந்தியாவில் 50 ஆண்டுகள்

CASPR-729-203 Tam

திப்பட நேர்ந்துவிட்ட ஒரு தண்டனையைப் பெற்றுவிட்டாற் போன்ற பிரமை.

முதல்நாள் இரவு.

உறக்கம் எங்கோ போய் ஒளிந்து கொண்டது. கருவேல முள்ளின் வீரியமாகத் தாக்கும் எண்ணங்களோடு படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார்.

தான் தேடிய நிழலாய்த் தெரியவில்லை. இந்த நிழல் வேறு. ஓர் அசுர இருட்டின் மூடிய இமைகள் காட்டும் போலி நிழல்.

மறுநாள்.

சாருமதியைப் பேற்றுக்காக மருத்துவமனையில் சேர்த்தாயிற்று.

கொல்லைப்புறம் சென்று திரும்பிய போது.

''பேத்தி பிறந்திருக்கா உங்களுக்கு...''

யாரோ ஒருபெண்மணி - பக்கத்து வீடாம், சொன்னாள்.

அரைமணி சென்று நாராயணன் வந்தான்.

''அப்பா! குழந்தை அப்படியே அம்மா தான்!...''

''ஜானகியா?....''

இரண்டாம் மாதம்.

....இரண்டு மாதத்துக் குழந்தை குஷியான 'மூடில்' இருக்கிறது. க்க்க்க் க்ர் க்ர் என்ற சத்தங்களை நிறைய வெளியிடுகிறது. அதனிடம் நேரம் கிடைக்கும் போதெல்லாம் நிறையப் பேசலாம். இனேகிதமான, அன்பான குரலைக் கேட்கக் கேட்கக் குழந்தை மேலும் மேலும் குஷியான சத்தங்களை வெளியிடுகிறது. குழந்தை புன்சிரிப்பை வெளியிட ஆரம்பிப்பதும் இப்போதுதான். சிரியுங்கள். அதுவும் சிரிக்கிறது....

ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில், ஏதோ ஒரு புத்தகத்தில் படித்த வரிகள் நினைவுக்கு வந்தன.

வெளித் திண்ணையில் சுவரில் சாய்ந்தபடி அமர்ந்திருக்கிறார் ஆராமுவதன். மடியில் பேத்தி படுத்திருக்கிறாள்.

'ஜானு!....''

மெல்ல அந்தப் பெயரை உச்சரிக்கிறார். பாட்டியின் பெயரைத்தான் வைத்திருந்தார்கள்.

பெயர் மட்டும்தானா!

சற்றே நீண்ட அந்த மூக்கு .... அப்படியே அச்சு அவள்தான்.

அவரைப் பார்த்துச் சிரிக்கிறது. அந்தச் சிரிப்பு. அப்படியே அச்சு அவள்தான்.

அந்த உருண்டை முகம். கன்னக் கதுப்புகள். குட்டையான கால்கள். உருண்டையான சின்னச் சின்ன விரல்கள். அப்படியே அச்சு அவள்தான்.

''ஜானு!....''

தலையைச் சற்றே தாழ்த்தி மீண்டும் அந்தப் பெயரை அவர் உச்சரித்தபோது, அந்தக் குழந்தை எதையோ ரசித்த மாதிரி உணர்ந்து கொண்ட மாதிரி சிரிக்கிறது!

ஓசையில்லாத அந்தச் சிரிப்பு அவர் மனசை நிறைக்கிறது.

ஆயுசு முழுக்க அவளும் இப்படித்தானே சிரித்துக் கொண்டிருந்தாள்! நினைக்கையில் கண்களும் நிறைகின்றன.

''உன் மனைவியும் நீயும் ரொம்ப ஒத்த குணமாயிருக்கிறீர்களாமே?''

''ஆமாம் டைவர்ஸ் பண்ணிடலாம்னு சொன்ன போது அவளும் அதையேதான் நினைத்ததாகச் சொன்னாள்!'' மு. செல்வ பாண்டியன்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

எவரும் கவனித்து விடப் போகிறார்களே என்ற அவசர உணர்வில் கண்களைத் துடைத்துக் கொள்கிறார்.

எதுவோ தனக்குக் கிடைத்து விட்டாற் போன்ற சுய திருப்தி அவரை ஆட்கொள்கிறது.

அவர் எதிர்பார்த்த நிழலா?

ஆத்மார்த்தமாக அவரோடு பேசும்நிழலா? முன்னும் பின்னும் நீண்டு விரியாமல் ஒரு குடையாய் அவரைச் சுற்றிக் கவிந்திருக்கும் நிழலா? அவருக்கு அடிமையாகிப் போகிற நிழலா? அவரை அடிமைப்படுத்துகிற நிழலா?

அடிமை எப்படி அடிமைப்படுத்த முடியும்?

இதோ!

'ஜானகி! நீ மறுபடியும் பிறந்து வந்திருக்கியா? என் மேலதான் உனக்கு எவ்வளவு இரக்கம்! நான் கவலைப்படக் கூடாது. ஏங்கித் தவிக்கக் கூடாது. முடமாகிப் போன புருஷார்த்தத்தோடு ஏதோ விக்னம் ஏற்பட்டுப் போன....'

சட்டென்று இடுப்பில் ஒரு தாக்குதல்.

எண்ணங்கள் இழையறுந்துத் தொங்கின.

குழந்தையைப் பார்த்தார்.

உதைக்கிறதையும் உதைத்து விட்டு அது சிரிக்கும் சிரிப்பில் அவர் உடல் முழுவதும் ஒரு சிலிர்ப்பு.

அந்தச் சிலிர்ப்புக்கு என்ன அர்த்தம்?

''அப்பா!....'' என்று அழைத்துக் கொண்டே வெளியே வந்தான் நாராயணன்.

எந்தவித அசைவும் இல்லாமல் எதையோ நிறைவேற்றி வைத்த லட்சிய வெற்றியோடு அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தது குழந்தை.

எந்தவிதச் சலனமும் இல்லாமல் இழந்த எதையோ மீட்டுக் கொண்டு விட்ட திருப்தியில் இமை மறந்த விழிகளோடு சுவரில் சாய்ந்தபடி இருந்தார் ஆராமுவதன்!

''அப்பா!....''

நாராயணனின் குரல் கண்டத்தைவிட்டுப் பெருத்த ஓசையுடன் வெளியே வந்து விழுந்தது.

ஊஹூம்!

பரமேஸ்வரன்

# ஒரே நாளில் தொடர்ந்த அனுபவங்கள்!

மே மாதம் 22ந் தேதி விருகம்பாக்கம் அருகில் உள்ள ஐயப்பா நகரிலிருந்து ஒரு கல்யாணக் கோஷ்டியினர் ஜெம்பி 17-ஏ பஸ் பிடித்து சபையர் தியேட்டர் வரை வந்து இறங்கினார்கள். அங்கிருந்து மூன்று ஆட்டோ ரிக்ஷாக்களில் திருவல்லிக்கேணி நோக்கிப் பயணமானார்கள். பீட்டர்ஸ் சாலையில் நுழையும்போது ஒரு லாரி வேகமாக வர, கண் இமைக்கும் நேரத்தில் பயங்கர விபத்து. அடிபட்டும் தெய்வாதீனமாக உயிர் தப்பி விட்டனர். கல்யாணக் கோஷ்டியைச் சேர்ந்த பரமேஸ்வரன், பத்மராஜ் குடும்பத்தினரைச் சந்தித்தபோது பரமேசுவரன் கூறியவை.

''கண் இமைக்கும் நேரத்தில் இது நடந்து விட்டது. சில விநாடிகள் என்ன நடந்தது என்றே எனக்குத் தெரியாது. நினைவு திரும்பியதும் நான் என் நண்பன் பத்மராஜை அழைத்துக் கொண்டு ராயப்பேட்டை ஆஸ்பத்திரிக்குச் சென்றேன். என்னுடன் வேறு ஒருவரும் வந்திருந்தார். எல்லாவித உதவிகளையும் செய்த அவரிடம் ''நீங்கள் யார்?'' என்றேன். ''பீட்டர்ஸ் சாலையில் ஏதாவது ஒரு ஓரத்தில் இருப்பேன்'' என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.

''எங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களைத் தமது டாக்சியில் ஏற்றிக் கொண்டு வந்ததோடு, கூட இருந்து உதவியிருக்கிறார் ஒரு டாக்சி டிரைவர். பைசா கூடப் பணம் வாங்கிக் கொள்ளவில்லை. அவரது டாக்சி நம்பர் டி.எம்.பி. 7585. அவரைப் பார்த்து நன்றியுடன் என்னால் முடிந்த சிறு அன்பளிப்புக் கொடுக்கத் தேடிக் கொண்டிருக்கிறேன்.

''ஒரே நாளில் இரண்டு மருத்துவ மனைகளையும் பார்த்துவிட்டேன். ராயப்பேட்டை மருத்துவ மனையை விட சென்னை பொது மருத்துவ மனை எவ்வளவோ மேல். முன்னையில் கவனிப்புப் போதாது. இதன் நடுவில் ஒரு போலீஸ்காரர் என்னைத் தொந்தரவு செய்துகொண்டிருந்தார்; வாக்குமூலம் தரச் சொல்லி. ''உள்ளமும் உடலும் வெலவெலத்துப் போக, நான் எழுத முடியாத நிலையில் இருக்கிறேன்'' என்றேன். அவர் விடவில்லை. ''நான் சொல்வதை எழுதித் தாருங்கள்'' என்றார். எங்களை மோதிவிட்டுச் சென்ற லாரி டிரைவருக்குச் சாதகமாக வாக்குமூலம் தரும்படி சொன்னார். நான் மறுத்து விட்டேன். விபத்து நடந்த இடத்தில் இரண்டு பவுன் செயின், கால் பவுன் ஜிமிக்கி, ஒரு ஜோடி புதுச் செருப்பு எல்லாம் விழுந்து விட அவை பற்றிய நினைவே இல்லாமல் ஆஸ்பத்திரிக்கு வந்துவிட்டோம். ஆனால் எல்லாமே பத்திரமாக ஆஸ்பத்திரிக்கு வந்து சேர்ந்து விட்டன. தீயவர்கள் உலகில் இருந்தாலும் பல நல்லவர்களும் உள்ளனர். அவர்களால்தான் மழையே பெய்கிறது என்கிறார்களே எவ்வளவு உண்மை!''

விபத்தில் அதிகமாக அடிபட்டவர்கள் இருவர். 11 வயது சுஜாதாவுக்கு முகத்தில் பிளாஸ்டிக் சர்ஜரி தேவைப்பட்டிருக்கிறது.

பேட்டி: **ருக்மிணி ராமச்சந்திரன்**

---

## இருக்கிறது சாதனம்!

முதல் அணுகுண்டு படைப்பை மேற்பார்த்து வந்த விஞ்ஞானி ராபர்ட் ஆப்பன் ஹீமர் அமெரிக்க காங்கிரஸ் குழு முன்பு அதைக் குறித்த விவரங்களை விளக்குவதாக இருந்தார். அவர் பேச்சைக் கேட்க அறிஞர்களும் பொது மக்களும் கூட்டமாகத் திரண்டிருந்தனர்.

ஹீமர் அணுகுண்டின் அழிக்கும் ஆற்றலைக் குறித்து விளக்கிக் கொண்டு வந்தபோது, 'இதிலிருந்து தப்பித்து மீட்சி பெற ஏதேனும் வழி இருக்கிறதா?' என்ற கேள்வி கேட்கப்பட்டது.

''இல்லாமல் இருக்குமா? நிச்சயமாக இருக்கிறது'' என்றார் விஞ்ஞானி.

''அது என்ன வழி தெரிவியுங்கள்'' என்று மீண்டும் கேட்கப்பட்டது.

ஹீமர் ''அதுதான் சமாதானம்'' என்று மெல்லக் கூறிவிட்டு அமர்ந்து கொண்டார்.

- ஆதாரம்: ''அறிஞர்கள் வாழ்விலே'' என்ற நூல்

- வி. ஆர். ராஜா










# குடும்பக்கட்டுப்பாடோ?.. குழந்தைகள் கட்டுப்பாடோ?






## அத்தியாயம் 45

# பழைய அறை எதிரில்

**கா**லஸண்ட்ராவின் தளத்திலிருந்து காப்டன் டெய்லர் இங்க்லண்டுக்குச் சுட்டிக் காட்டிய காட்சியைக் கண்டு வில்வரின் மதிப்பீடு தவறு யிருக்குமோ என்று இங்க்லண்டுகூடச் சந்தேகித்தான். இந்திரஜித் அலைந்த் கடல் ராணியுடனும், சாருவுடனும் நீச்சல் போட்டுக் கொண்டிருந்தான். வெகு வேகமாக நீந்தி ஒரு முறை கடல் ராணியின் இடையைக் கட்டி இழுத்தான். இன்னொரு முறை சாருவின் இடையைப் பிடித்து ஒரே அழுத்தாகக் கடலுக்குள் அழுத்தித் தானும் மூழ்கி மறைந்தான். சில விநாடிகளுக்குப் பிறகு கடல் ராணியும் நீருக்குள்மறைந்தாள். பிறகு மூவருமே சற்றுத் தூரத்தில் நீருக்கு வெளியே எழுந்தார்கள். மல்லாந்து சேர்ந்து நீந்தினார்கள்.

அன்று காலை பின் பனியின் உக்கிரம் அத்தனை அதிகமில்லாததாலும் நேரம் ஏறி விட்டதாலும் அவர்கள் புனலாடு படலம் டெய்லருக்கும். இங்க்லண்டுக்கும் மட்டுமின்றி சிந்துதுர்க்கக் கோட்டை மீதிருந்த காவல் வீரர்களுக்கும் நன்றாகவே தெரிந்ததால், அதைப் பலரும் ரசிக்கவே செய்தார்கள். இதனால் ஆங்காங்கு ஏற்பட்ட சிரிப்பும் கொம்மாளமும் டெய்லரின் கோபத்தைக் கிளறிவிடவே அவன் மீண்டும் கூறினான்: ''ஐ டோல்ட் யூ வில்வர் ஈஸ் ஜஸ்ட் எ பூல். திஸ் பெலோ அலந்த் ஈஸ் எ வுமன் ஹண்டர் அண்ட் நதிங் மோர் (வில்வர் முட்டாளென்று உன்னிடம் முன்னமே சொன்னேன், இந்த அலந்த் பெண்வேட்டை ஆடுபவன்,வேறெந்த விசித்திரமும் இதில் இல்லை)'' என்று.

டெய்லரை விடக் கூரிய மூளையுள்ள இங்க்லண்டுக்கு அந்த மதிப்பீடு ஒப்புதலாயில்லை. வில்வர் அத்தனை முட்டாள் அல்ல என்பதும் அவனை விட விஷயங்களை ஊன்றிப் பார்க்கும் சக்தி தனக்கோ, டெய்லருக்கோ கிடையாதென்பதும் இங்க்லண்டின் நீண்ட நாள் அனுபவமாதலால், ''சற்றுப் பொறுத்துப் பார்ப்போம்'' என்று மட்டும் சொன்னான் டெய்லரிடம்.

''பொறுத்து எத்தனை நேரம் வேண்டுமானாலும் பார்க்கலாம். அவர்கள் இப்போதைக்கு நீச்சலை முடிப்பதாகத் தெரியவில்லை'' என்று டெய்லர் கூறினான், இகழ்ச்சி மிகுந்த குரலில்.

அவன் சொன்னது சரியாகக் கூட இருந்தது. நடுவில் அலந்தும் இருபுறமும் இரு பெண்களுமாக நீந்திக் கொண்டு சிந்து துர்க்கத்தின் கோட்டைச் சுவரைச் சுற்றிச் சென்று கொண்டிருந்தார்கள். அப்படிச் சென்ற மூவரும் வடபுறம் நீந்தி, தென்புறத்தில் நின்றிருந்த காலஸண்ட்ராவின் கண்களிலிருந்து மறைந்து விட்டதால் டெய்லர் பெரிதாக நகைத்தான் இங்க்லண்டை நோக்கி. அதே சமயத்தில் பெரிதாக நகைத்துக் கொண்டு அலந்தும் இரு பெண்களும் கோட்டைச் சுவரின் வெளிப்புறத்திலிருந்த பழைய அறைக்குச் சென்றுகொண்டிருந்தார்கள். அறை கட்டிய பாதை இருக்குமிடம் வந்ததும் அலந்த் முதலில் கரையேறித் தன் இரு கைகளையும் இரு பெண்களையும் நோக்கி நீட்டி, கைகளை ஆளுக்கொன்றாகக் கொடுத்துப் பற்றிக்கொள்ளச் செய்து இருவரையும் கரையேற்றி விட்டான்.

கரையேறியதும் ராணி சொன்னாள் சாருவை நோக்கி, ''சாரு! நம்மை இவர் கரையேற்றி விட்டார்'' என்று.



# கடல் ராணி

## சாண்டில்யன்

சாரு புன்முறுவல் கொண்டாள். ''அடுத்து என்ன செய்யப் போகிறீர்?'' என்று கேட்டாள்.

''வேறென்ன செய்வார்? ஏதாவது வீண் சிக்கலில் மாட்டி வைப்பார்'' என்றாள் ராணியும் புன்முறுவல் கொண்டு.

இதற்கு அனந்த் ஏதும் பதில் சொல்லவில்லை. நனைந்த சிலைகளுடன் நின்ற அந்த இரு பெண்களையும் நோக்கினான் மாறி மாறி. இரண்டும் இரண்டு வித மலர்களாயிருந்தன. மலர்களுக்குள் மலர்களும் பல இருந்தன. வெவ்வேறு விதமான மலர்கள் பூத்துக் குலுங்கிய இரு பூஞ்சோலைகள் போலிருந்தார்கள் அந்த இரு அழகிகளும்.

ராணியின் கருத்த குழலும், கூர்மையான வீர நோக்கை வீசிய கருவண்டு விழிகளும் அனந்தின் மனத்தை அலைக்கழித்தன. முதல் நாள் அவளை அதே இடத்தில்தான் அவன் சந்தித்தான். அப்பொழுதும் நீந்தி முடித்துத்தான் அவள் திரும்பினாள். அப்பொழுது கடும் சொல்லுள்ள கடல் ராணியாக வந்தாள். தன்னை அந்தப் பழைய அறையை விட்டு அகல உத்தரவிட்டாள். இன்று அவள் கடல் ராணியாக வரவில்லை. காதல் ராணியாக வந்திருந்தாள். கடலுக்குள் நீந்திய போதிலும் தனது கைகளும் கால்களும் பட்டதால் உணர்ச்சியால் துடித்த, குழைந்த, இன்ப இம்சைக்குள்ளான அவயவங்களுடன் வந்திருந்தாள். அவள் உடலில் ஒட்டிய



சிலை அன்று காலைக் கதிரவன் வெயிலில் உள்ளிருக்கும் அழகுகளை ஆயிரம் மடங்கு அதிகப்படுத்திக் காட்டியது. கட்டு விரியாத கனக சரீரத்துடன் காணப்பட்டாள் அவள். அவள் தனக்கெதிரில் அந்தப் பாறை மீது நின்றது ஏதோ காட்டு மலர்ச் செடி ஒன்று பாறை மீது முளைத்து நின்றதாகத் தெரிந்தது அவனுக்கு. அவள் புஷ்டியான கன்னங்களில் வழிந்த நீர்கூட அவள் கன்னங்களுக்குப் புது மெருகைக் கொடுத்தது. அவள் தலை மயிரைப் பிழிந்தெடுத்துச் சுற்றிக் கொண்டதிலும் நாட்டிய பாணி இருந்தது. அவள் அழகிய கால்கள் இணைந்து நின்றதால் ஒட்டிய சேலைப் பகுதி சில இடங்களில் வரிகளாகவும், சில இடங்களில் அடியோடு ஒட்டித் தட்டையாகவும் தெரிந்ததால் அவள் வழுவழுத்த கால்களின் திண்ணிய பரிமாணமும் இணைந்த இடத்துச் சீர்மையும் புலனாகவே பெரிதும் நிலைகுலைந்தான் அனந்த். அலைகடல் தாமரையை எண்ணி.

அடுத்து மலை மலரான சாருவின் மீது கண்களை ஓட்டினான். அவன் கடல் ராணியைத் துருவித் துருவிப் பார்த்ததால் சற்று கடுத்த முகத்துடன் முதலில் காணப்பட்ட சாரு அவன் பார்வை தன் மீது நிலைத்ததும் தனது அல்லி முகத்தில் மந்தகாசத்தைக் காட்டினாள். அதனால் சற்றே கோடிகளில் இழுபட்டு இன்பப் புன்முறுவலைக் காட்டிய செவ்விய உதடுகளும் அவற்றின் ஈரமும் அவனுக்கு மௌனமான அழைப்பை விடுத்தன. அவளும் கடல் ராணியைப் போலவே தலைக் குழலைப் பிழிந்தது மட்டுமின்றி சிறிது குனிந்து, வளைந்து, மயிரை உதறியதால் குனிந்தபோது இடைவெளி கொடுத்த ஆடை, மார்பின் உச்சி விளிம்புகளைப் புலப்படுத்தியதை அவள் குழல் திரையிட்டு மறைத்தது. "அவசரப்பட வேண்டாம்" என்று எச்சரிக்கையும் விடுத்தது. அவளுடைய நீண்ட கால்களில் ஒட்டிக் கிடந்த சேலையை விட இடையில் சுற்றப்பட்ட சேலை சிறிது நெகிழ்ந்து புலப்படுத்திய பொன் தகடு போன்ற அழகிய வயிறும், குழலை உதறித் தட்ட அவள் திரும்பியபோது மறைவிலும் புலப்பட்ட பின்னெழிலின் அளவுடன் கூடிய பரிமாணமும், திரும்பிய சமயத்தில் அவள் கழுத்து சுருண்ட நிலையிலும் குன்றாத அழகுடன் விளங்கிய விந்தையும், கழுத்தைத் தழுவிக் கிடந்த சிறு சங்கிலி ஒளிந்த இடமும், அனந்தின் மனத்தை எங்கோ அள்ளிச் சென்றன.

அந்த இரு மாதர்களும் அடுத்து சேலையைப் பிழியவும் உலர்த்தவும் எடுத்த நடவடிக்கைகள் அவனை உன்மத்தம் கொள்ளும் நிலைக்குக் கொண்டு வரவே, "அறைக்குள்ளே சென்று இதைச் செய்யலாமே" என்று கடுப்புடன் சொன்னான் அனந்த். கடலில் நீராடிய சில மாலுமிகளும் அந்த இரு மடந்தையரைக் கண் குத்திப் பாம்புகளாகப் பார்த்த காரணத்தால், அவன் காட்டிய பொறுமை அவர்கள் இருவருக்குமே இன்பமாக இருந்ததால் பொருள் மிகுந்த பார்வையை இருவரும் பரிமாறிக் கொண்டனர், இன்பமாகப் புன்முறுவலும் செய்தனர். அத்துடன் நிற்கவுமில்லை அவர்கள். "சாரு! கவனித்தாயா இவரை?" என்றாள் ராணி.

"கவனிக்காமல் இருப்பேனா?" என்றாள் சாரு.

"மாலுமிகள் நம்மைப் பார்க்கக் கூடாதாம்" என்றாள் ராணி மறுபடியும்.

"இத்தனை நேரம் நீந்தியதைப் பார்த்தார்களே, அது சரி போலிருக்கிறது?" என்றாள் சாரு.

இந்தச் சமயத்தில் வாயை மூடிக் கொண்டிருந்திருக்கலாம் அனந்த். ஆனால் தன் சாமர்த்தியத்தைக் காட்டி, "அப்பொழுது உங்கள் அழகில் முக்கால்வாசி நீரில் மறைந்திருந்தது" என்று சொன்னான்.

சாரு நகைத்தாள். "ஏன் முழு வாசியும் கூட மறைந்திருந்தது" என்றாள் நகைப்பினூடே.

"எப்பொழுது?" அர்த்தம் புரியாமல் கேட்டான் அனந்த்.

"உள்ளே மூழ்கி நீந்தியபோது, சாருவை நீருக்குள் துரத்தி அவள்...." என்ற ராணி வாசகத்தை முடிக்கவில்லை.

"ராணியும் மூழ்கி நீருக்குள் உங்களை நாடியதும் நீங்கள் என்னை விட்டுத் திரும்பி அவள்மீது....." என்றாள் சாரு. அவளும் வாசகத்தை முடிக்கவில்லை.

அந்த இரு பெண்களும் முடிக்காமல் விட்ட பகுதிகளை மனத்தில் நிரப்பிக் கொண்ட அனந்த் பெரும் சங்கடத்துக்குள்ளானான். அவன் இதயத்துக்குள்ளே ஏற்பட்ட வெறி கண்களிலும் தெரியவே இரு பெண்களும் நகைத்தனர் அவனை நோக்கி. "இவருடன் மேலும் விளையாடுவது தவறு சாரு" என்று போலி எச்சரிக்கை செய்தாள் ராணி.

"அபாயம்" என்று திருத்தினாள் சாரு.

"யாருக்கு?" என்று வினவினாள் ராணி சாருவை நோக்கிக் கேலியாக.

"இந்த இடத்தில் முதலில் யாரைச் சந்தித்தாரோ அவர்களுக்குத்தான்" என்று சாருவும் கேலி செய்தாள் பதிலுக்கு.

"இது மலைப் பாறை" என்றாள் ராணி.

---

ஒரு எலியும் பூனையும் ஓட்டலுக்குச் சென்றன. "என்ன சாப்பிடுகிறீர்கள்?" சர்வர் கேட்டார். "எனக்கு வெங்காய பஜ்ஜி, மசாலா தோசை" என்றது எலி. "பூனைக்கு ஒன்றும் வேண்டாமா? பசிக்கவில்லையா?" சர்வர் கேட்டார்.

"அதற்கும் பசித்தால் நான் உனக்கு இங்கே ஆர்டர் கொடுத்துக் கொண்டிருக்க முடியுமா என்ன?" எலி திருப்பிக் கேட்டது. - ராமுசாமி






ஜெயலலிதா எழுதும்
உறவின் கைதிகள்
புதிய தொடர்கதை
ஆரம்பமாகிறது...



### எந்தக் கண்ணுக்கு டாக்டர்?

டாக்டருக்கு அந்த ஊரில் நல்ல பெயர், ''கைராசி'' டாக்டர் என்று.

கண் சிகிச்சைக்குப் படிக்க வேண்டும் என்ற ஆசை.

வியன்னாவுக்குப் புறப்பட்டார்.

''உங்களை எல்லாம் பிரிந்து 2 வருஷம் நான் இருக்க வேண்டியதை நினைத்து வருத்தமாக இருக்கிறது. ஆனால், 2 வருஷம் கழித்து ஒரு சிறந்த கண் டாக்டராக வந்து நம் மக்களுக்கு உதவி செய்யப் போகிறேன் என்பதை நினைத்து ஆறுதலாய் இருக்கிறது'' என்று கூறி வியன்னா புறப்பட்டார். வியன்னா போன பிறகு கண் சிகிச்சைக்கான படிப்பு ஒரு வருஷம்தான் என்று தெரிந்து அதை முடித்துக் கொண்டு வந்து விட்டார்.

ஊர் மக்களுக்குச் சந்தேகம்! டாக்டர் 2 வருஷம் ஆகும் என்றார்; ஆனால் ஒரு வருஷத்தில் திரும்பி விட்டார்; அவர் ஒரு கண்ணுக்குத்தான் படித்திருக்கிறார் போலிருக்கிறது; அது இடது கண்ணா? வலது கண்ணா? நமக்குத் தெரியாது. அதனால் நாம் கண் வைத்தியத்துக்காக அவரிடம் போகக் கூடாது என்று முடிவு செய்து, அவரிடம் யாரும் வைத்தியத்துக்குப் போகாமல் இருந்து விட்டார்கள்!

டி. வி. கணபதி

---

''அதனால்?'' சாருவின் கேள்வியில் அர்த்தம் இருந்தது.

''அடர்ந்த காடு இல்லை. குடிசையில்லை'' ராணி புகன்றாள் புன்முறுவலுடன்.

''குடிசையை விட அறை விசேஷம். ராணிகள் அறைகளைத்தான் விரும்புவார்கள்.''

''நீ படே பேர்வழி.''

''எப்படி?''

''கோர்படே வம்சம்.''

''அதனால்?''

''மகாராஷ்டிர முதல்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவள்.''

''நீ மட்டுமென்ன? மகாராஷ்டிர தளபதியின் பெண். நீயே இந்தக் கோட்டையின் தலைவி. அதுவும்.....''

''அதுவும்?''

''கொள்ளைக்காரி. அவரைக் கொள்ளை கொண்டு விட்டாய்.''

''நீ மட்டுமென்ன? வேவுகாரி. எந்த ரகசியத்தையும் அறியக் கூடியவள். அவர் மனத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறாய்.''

இரு பெண்களின் இடக்குப் பேச்சையும், தான் ஏதோ அதில் சம்பந்தப்படாதவன் போல் தன்னை அடியோடு ஒதுக்கி அவர்கள் இருவருமே தன்னைப் பற்றிப் பல முடிவுகளைக் கட்டியதையும் கண்ட அனந்துக்கு உள்ளூறக் கோபம் ஏறவே, ''என்னை ஒரு பொருட்டாக நீங்கள் மதிக்கவில்லை'' என்று சீறினான்.

இதைக் கேட்ட இரு பெண்களும் தங்கள் கமல விழிகளால் அந்தக் காளையை நோக்கினார்கள் வியப்புடன். ''உங்களைப் பற்றித் தானே பேசுகிறோம்?'' என்று கேட்டாள் ராணி.

''நீங்கள் ஒருவருக்கொருவரே பேசிக் கொண்டிருக்கிறீர்கள்'' என்று குற்றம் சாட்டினான் அனந்த்.

''வேறு யாருடன் பேச வேண்டும்?'' என்று ராணி வினவினாள்.

''என்னைக் கலக்கவில்லை நீங்கள்'' என்றான் அனந்த் சீற்றத்துடன்.

''ஐயையோ!'' என்று சாரு கூறினாள்.

''கேவலம்'' என்று வாயைப் பொத்திக் கொண்டாள் ராணி.

''பேச்சிலாவது பண்பாடு வேண்டும்'' என்று சாரு இகழ்ச்சிப் புன்முறுவல் காட்டினாள்.

''அது இங்கே பூஜ்யம்.'' என்ற ராணி, ''வா, சாரு. அறைக்குப் போய் உடை மாற்றிக் கொள்வோம்.'' என்று அந்தப் பழைய அறையை நோக்கி நடந்தாள், குறுக்கே நின்ற அனந்தை இடித்துக்கொண்டு. சாருவும் தொடர்ந்தாள் கையால் பலவந்தமாக அனந்தை அகற்றி. அறையை அவர்கள் அடைந்து கதவையும் மூடிக் கொண்டார்கள்.

அனந்தின் சிந்தனை வேகமாக ஓடியது. அவன் அறையை நோக்கி நடக்க முற்பட்டான். அறைக் கதவை அவன் அடைந்து கதவை அசைத்தான். அப்பொழுது அறையின் வெளியிலிருந்த மறைவுப் பாறையிலிருந்து எழுந்த ஒருவன் ''அது முறையல்ல'' என்று குரல் கொடுக்கவே சட்டென்று திரும்பிய அனந்த், அங்கு நின்றவனைக் கண்டதும் பெரும் பிரமிப்புக்குள்ளானான்.

சற்று எட்ட இருந்த பாறை மறைவிலிருந்து எழுந்த துலாஜி ''எதற்கும் காலம் நேரமுண்டு'' என்றான்.

''நீ தவறாக நினைக்கிறாய்'' என்றான் அனந்த்.

''பொறுத்தார் பூமி ஆள்வார்'' என்றான் துலாஜி.

''பொறுதார்?'' — அனந்தின் கேள்வியில் எரிச்சல் இருந்தது.

''பெண்கள் ஆள்வார்'' என்று துலாஜி நகைத்தான்.

''நகைப்புக்கு இது நேரமில்லை'' என்றான் அனந்த்.

''பெண்களுடன் விளையாடுவதற்கும் நேரமில்லை'' என்றான் துலாஜி.

''ஏன்?''

''செய்தி வந்திருக்கிறது.''

''எதைப் பற்றி?''

''யாரைப் பற்றி என்று கேள்.''

''யாரைப் பற்றி?''

''மாக்ரேயைப் பற்றி'' என்ற துலாஜி ''நாம் போருக்குச் சித்தமாக வேண்டும்'' என்றும் சொன்னான். மேலும் பயங்கர விவரங்களையும் கூறலானான். (தொடரும்)

# தாழ்மையின் உயர்வு



புத்தரின் பிரிய சிஷ்யர் ஆனந்தர் தர்மப் பிரசாரம் செய்தபடி ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார். ஒரு கிராமம் வழியாகச் செல்கையில் கிணறு ஒன்றையும் அதனருகே நீர் சேந்திக் கொண்டிருந்த மாதங்க (வேடர்) குலப் பெண்ணொருத்தியையும் பார்த்தார்.

அவளிடம் குடிக்க நீர் கேட்டார்.

பகதி என்று பெயருள்ள அந்தப் பெண் சொன்னாள்: ''ஐயா பிராமணரே, தங்களுக்கு நீர் தருவதற்கில்லாத ஈன ஜாதிப் பிறவி நான். என்னிடம் எந்த ஸேவையும் கேட்டுத் தங்கள் தூய்மையை இழந்து விடாதீர்கள்.''

ஆனந்தர் மறுமொழி சொன்னார்: ''நான் ஜாதி கேட்கவில்லை; ஜலம் கேட்டேன்.''

மாதங்கப் பெண்ணின் மனசு துள்ளியது ஆனந்தத்தில்.

ஆனந்தருக்கு நீர் கொடுத்தாள்.

நன்றி கூறி, நடையைத் தொடர்ந்தார் ஆனந்தர்.

சிறிது பின்தங்கித் தங்கி அவரைத் தொடர்ந்தாள் தொடக்கூடாதவள்.

போகிற வழியிலே, ஆனந்தர் சாக்யமுனி கௌதமரின் சீடர் என்று தெரிந்து கொண்டாள்.

நேரே புத்தரிடம் சென்று கூவி முறையிட்டாள்:

''பகவானே, என்னைக் காப்பாற்றுங்கள். உங்கள் சீடர் ஆனந்தர் வாழும் இடத்தில் நானும் வாழ அநுமதியுங்கள். நான் அவரைப் பார்த்துக் கொண்டே யிருப்பேன். அவருக்குப் பணிவிடைகள் செய்வேன். ஏனென்றால் நான் ஆனந்தரை... காதலிக்கிறேன்.''

புத்தர் பிரானுக்கு அவளது இதயவுணர்ச்சிகள் புரிந்தன.

''பகதி! உன் இதயத்தில் காதல் நிரம்பியிருக்கிறது. ஆனால் உன் உணர்வுகளே உனக்குப் புரியவில்லை. நீ காதல் கொண்டிருப்பது ஆனந்தனிடம் அல்ல. அவன் காட்டினானே, பரிவு, அந்தப் பரிவிடமே நீ காதல் கொண்டிருக்கிறாய். ஆகையால் உன்னிடம் அவன் நடத்திக் காட்டின அந்தப் பரிவை நீ மணம் செய்து கொள்; உன்னுடைய எளிய நிலையில் நீயும் அதை மற்றவர்களிடம் நடத்திக்காட்டு'' என்றார்.

தொடர்ந்து சொல்வார்: ''ஓர் அரசர் அடிமையொருவனிடம் தயாளமனப்பான்மை காட்டினால் அதிலே பெரிய புண்ணியம் இருக்கிறது என்பது வாஸ்தவம். ஆனால் அதனினும் பெரும் புண்ணியம், அந்த அடிமைதான் உறும் தீங்குகளைக் கருதாமல் எல்லா மக்களிடமும் பரிவும் நல்லெண்ணமும் கொள்ள முடியுமாயின் அதுவே! அதனால் அவன் தன்னைக் கொடுமைப் படுத்துவோரிடமும் வெறுப்பை இழப்பான்; அவர்களது அக்கிரமத்தைத் தடுப்பதற்கு அசக்தனாக அவன் உள்ள போதும் அவர்களுடைய திமிரையும், ஆணவப் போக்கையும் கருணையோடு பார்த்துப் பரிதாபப் படுவான்.

''பகதி! நீ பாக்கியசாலி. மாதங்கப் பெண்ணாயினும் நீயே உயர் வர்க்கத்து ஆண் பெண்களுக்கும் முன்மாதிரி ஆவாய். தாழ்ந்த ஜாதிக்காரியான உன்னிடமிருந்து பிராமணரும் படிப்பினை பெறுவர். நியாய — தர்மப் பாட்டையிலிருந்து விலகாமலிருந்தாயாகில், அரியணை ஏறிய அரசியரின் கீர்த்தியையும் மிஞ்சிப் பிரகாசிப்பாய்.''

[புத்தர் உபதேசங்களிலிருந்து: ரா. கணபதி]

# நட்சத்திர வடிவம் பரிசுத் திட்டம்-7

இங்கு உள்ள துண்டுகளை ஜாக்கிரதையாக ஓரத்தை யொட்டிக் கத்தரிக்கவும். அவற்றை மேலும் பின்னப்படுத்தக் கூடாது. ஒரு வெள்ளைத் தாளில் இவை சேர்த்து ஒட்டித் திரைப் பட நட்சத்திரத்தின் உருவை முழுமையாக நீள் சதுரப் படமாகக் குறையின்றிக் காண முடிகிறதா பாருங்கள். பத்து கல்கி நேயர்கள் மட்டுமே அவ்வாறு காண முடியும். அதிர்ஷ்டசாலிகளான அந்தப் பத்துப் பேருக்கும் தலா ரூ. 25 பரிசு உண்டு. தவிர அந்தத் திரைப்பட நட்சத்திரத்தின் கையெழுத்துடன் கூடிய புகைப் படமும் அனுப்பி வைக்கப்படும். முடிவு தேதியான ஜூன் 23 தேதிக்குள் அனுப்பப்படும் உருவங்களே பரிசீலிக்கப்படும். உறையின் மேல் நட்சத்திர வடிவம்-7 என்று குறிப்பிடவும். கடிதப் போக்கு வரத்துக் கிடையாது. கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. உங்கள் விலாசத்தைத் தெளிவாக, ஒட்டப்பட்ட படத்தின் கீழே குறிப்பிட மறவாதீர்கள்.

- ஆசிரியர் கல்கி, சென்னை-32

# வலி இல்லாமல் பிரசவம்!



× டாக்டர் பாலகிருஷ்ணன்

டாக்டர் ஞானசௌந்தரி

[டாக்டர் எஸ். பாலகிருஷ்ணன் லண்டன் புனிதமேரி மருத்துவ மனையில் "எபிடியூரல் அனல்ஜெஸியா" நிபுணர். வலியே தெரியாமல் பிரசவிக்கிற நவீன முறை இது. அவர் தமது சென்னை விஜயத்தின் போது ராயபுரத்தில் இருக்கும் நாகமணி மருத்துவமனையின் ஸ்தாபகரும், மகப்பேறு வைத்திய நிபுணருமான டாக்டர் எஸ். ஞானசௌந்தரியைச் சந்தித்து இந்த நவீன முறை பற்றி விவாதித்தார்.]

ஞானம்: டாக்டர் பாலா! 'எபிடியூரல் அனல்ஜெஸியா' முறைப்படி சுலபமாக, வலியே இல்லாமல் பிரசவிக்கலாம் என்கிறீர்களே, அம்முறையின் தத்துவத்தைக் கல்கி வாசகர்களுக்காக எளிய சொற்களில் விளக்குங்களேன்.

பாலா: கர்ப்பப்பையிலிருந்து வலியை மூளைக்குத் தெரிவிக்கும் நரம்புகளில் மருந்து செலுத்துவதன் மூலம் தாற்காலிகமாக வலி உணர்வை அவை எடுத்துச் செல்லாமல் தடுத்து விடுகிறோம். இதனால் கர்ப்பிணிக்குப் பிரசவ வேதனை என்பதே கிடையாது.

ஞானம்: பெண்கள் பிரசவ வலி என்று அதிகம் சொல்கிறார்கள். ஆனால் வலிக்குப் பயந்து எனக்கு பிரசவம் வேண்டாம்னு யாரும் சொல்றதில்லே. தாய்மைப் பாசத்தோடு அந்தக் கொஞ்ச நேர வலியைத் தாங்கினால் என்ன? நீங்க சொல்கிற மருந்துக்கு அவசியம்தான் என்ன?

பாலா: வலி கொஞ்ச நேரம் என்று சொல்கிறீர்கள். தலைப் பிரசவம், சுமார் எட்டிலிருந்து பன்னிரண்டு மணி நேரம் வரை நீடிக்கலாம். வேறு பலருக்கு ஒவ்வொரு முறையும் பிரசவ வலி நீண்ட நேரம் நீடிக்கும். அப்படிப் பட்டவர்களுக்கு வலி இல்லாமல் குழந்தை பெறுவது ஒரு வரப் பிரசாதம்தானே!

ஞானம்: கர்ப்பிணிகளை மூன்று விதமாகப் பிரிக்கலாம். சுலபமாய்ப் பிரசவிப்பவர்கள், கஷ்டப்பட்டுப் பிரசவிப்பவர்கள். அறுவைச் சிகிச்சை மூலம் குழந்தை பெறுபவர்கள்.

பாலா: சுலபமாக வலி இல்லாமல் பிரசவிப்பவர்கள் உண்டு. இவர்களுக்கு வலி தாங்கக் கூடிய சக்தி இயல்பாகவே உள்ளது. அவர்களுக்கு இந்தப் புதிய முறை தேவையில்லை. இதை வலியைக் கொஞ்சம்கூடத் தாங்க முடியாதவர்களுக்குத்தான் அளிக்க வேண்டும். எந்தக் கர்ப்பிணியும் 12 மணி நேரத்துக்கு மேல் பிரசவ வேதனைப் படக் கூடாது. குழந்தையை வலி இல்லாமல் பெற



எபிடியூரல் அனல்ஜெஸியா மருத்துவப் பெட்டியை டாக்டர் ஞானசௌந்தரிக்கு, டாக்டர் பாலகிருஷ்ணன் பரிசளிக்கிறார்.

விரும்பினால் எபிடியூரல் அனஸ்தெஸியா முறையைத் தவிர வேறு வழி கிடையாது.

ஞானம்: ரொம்ப வலி தாங்க மாட்டாதவர்களை பெதடின், மார்பியா மூலம் தூங்கப் பண்ணி விடுகிறோம். கடைசி ஒரு மணி நேரம் அவர்களுக்கு வலி தெரியும்படி செய்கிறோம். இந்தக் கடைசி நேரத்தில் குழந்தை வெளியே வரும்போது வலி இருந்தால் என்ன? வலியே தெரியாமல் நரம்பில் ஊசி போடும் வைத்தியம் தேவையா?

பாலா: பெதடின் மயக்க நிலையைக் கொடுப்பது உண்மை. ஆனால் அது அதிகமாக ஒன்றரை மணி நேரத்துக்கு மேல் வேலை செய்யாது. குழந்தை இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் பிறக்கும் என்று தோன்றினால் பெதடின் கொடுக்க மாட்டார்கள். இல்லையா?

ஞானம்: கொடுக்க மாட்டோம். அது குழந்தைக்கு நல்லதல்ல.

பாலா: ஆகையால்தான் நான் இந்த முறையைச் சிபாரிசு செய்கிறேன்.

ஞானம்: இந்த முறைப்படி செய்தால் தாய் முக்கிக் குழந்தை பெறக் கூடிய சக்தியை இழக்க நேரிடலாமே? அது ஆயுதப் பிரசவமாக மாறலாம் இல்லையா?

பாலா: இந்த முறையில் தாய் முக்கும் சக்தியை இழப்பதில்லை. அதுதான் இதிலுள்ள சிறப்பு! வலி மட்டும்தான் தெரிவதில்லை! மற்ற இயக்கங்கள் பாதிக்கப்படுவதில்லை. இது காரணமாக ஆயுதப் பிரசவம் அதிகமாக ஏற்படுவதும் கிடையாது. மார்கேன் (Marcaine) என்ற இந்த மருந்தின் விலையும் கம்மிதான்.

சிக்கி: இந்த எபிடியூரல் முறையால் கர்ப்பிணிப் பெண்களுக்குத் தீமைகள் ஏதாவது ஏற்படுமா?

பாலா: நிச்சயமாக ஏற்படாது. தவறுகள் எந்தத் துறையிலும் நேர்வது உண்டு. அதற்கு இது விதிவிலக்கல்ல. அதற்காக இந்த முறையைப் பழிக்கக் கூடாது.

சிக்கி: மேடம்! அறுவைச் சிகிச்சை பிரசவங்கள் இப்போது அதிகமாகியுள்ளன. நிறையப் பணம் சம்பாதிக்க வழி இருப்பதால் இப்படி மருத்துவர்கள் செய்கிறார்கள் என்று பேசப்படுகிறதே!

ஞானம்: இந்த எண்ணம் ரொம்பத் தவறு. அந்தக் காலத்திலே தாய்மார்களுக்கு முதல் குழந்தை அநேகமாக இறந்தே பிறந்துள்ளது. ''மூத்தது மோளை, இளையது காளை'' என்று பழமொழி உண்டு. முதல் பிரசவம் எப்போதுமே கொஞ்சம் கஷ்டம்தான். சிக்கல்களைத் தவிர்க்க அவசியம் நேரும்போது அறுவைச் சிகிச்சை மூலம் ஆபத்தைத் தவிர்க்கிறோம்.

பாலா: அறுவைச் சிகிச்சை மூலம் தாய், சேய் மரண விகிதங்களைக் குறைக்கலாம். ஆனால் ஒன்று. அறுவைச் சிகிச்சையினால் இறப்பவர்களைவிட அதற்காகத் தரப்படும் மயக்க மருந்து காரணமாய் ஏற்படும் மரண விபத்துக்களே அதிகம். இந்த விகிதம் குறையவில்லை. இதை உத்தேசிக்கும்போது இந்த எபிடியூரல் முறை கைகொடுக்கும்.

ஞானம்: எல்லா விதக் கேஸ்களிலும் எபிடியூரல் முறையைக் கையாளலாமா?

பாலா: பேஷாக. அதுமட்டுமல்ல, இருதயம், சுவாசப்பை தொடர்பான வியாதிகள் உள்ள கர்ப்பிணிகளுக்கு இந்த முறையை நான் விசேஷமாகச் சிபாரிசு செய்கிறேன்.

ஞானம்: இந்த முறைப்படி பிரசவம் பார்க்க ஒரு உதவியாளர் ஒரு மகப்பேறு மருத்துவர், மற்றும் தாதியர் தேவை!

பாலா: தேவையில்லை. தேர்ச்சி பெற்ற ஒரே ஒரு தாதி போதும். சிக்கல் ஏற்பட்டால் அவர் மருத்துவர்களின் உதவியை நாடலாம்.

ஞானம்: இம்முறையினால் இரத்த அழுத்தம் குறைந்து, குழந்தையை அது பாதிக்கலாம் அல்லவா?

பாலா: வலி இல்லாதிருக்க இந்த மருந்தை ஊசி மூலம் முதுகில் செலுத்தும்போது ஒருசில நரம்புகளைத்தான் மரக்கடிக்கச் செய்கிறோம். இரத்த அழுத்தக் குறைவு ஏற்படுவதில்லை. அப்படியே ஏற்பட்டாலும் சுலபமாக ஆபத்தின்றிச் சமாளித்து விடலாம்.

ஞானம்: இந்த முறையை உபயோகப்படுத்தக் கூடாத சந்தர்ப்பங்கள் உள்ளனவா?

பாலா: ஓ! இருக்கே. வலியுடன்தான் குழந்தையைப் பெற்றுக்கொள்வேனென்று சபதம் செய்துள்ள தாய்மார்களுக்கு இது உபயோகப்படாது! தவிர முதுகில் ஏதாவது கோளாறு, அல்லது நரம்பு வியாதிகள் உள்ளவர்களுக்கு இம்முறை உதவாது.

சிக்கி: டாக்டர்! பொதுவாக இந்தியாவில் பிரசவ வலியைக் கர்ப்பிணிப் பெண்கள் விரும்புகிறார்கள். அப்போதுதான் பிறக்கும் குழந்தையிடம் தாய்க்குப் பாசம் இருக்கும் என்று நம்புகிறார்கள். உங்கள் கருத்து என்ன?

பாலா: சில கர்ப்பிணிகளுக்குப் பிரசவ வேதனை இல்லாமலே குழந்தை பிறக்கிறது. அவர்களுக்குத் தாய்ப் பாசம் இல்லை என்று சொல்கிறீர்கள்? அது அவரவர் உடல் வாகைப் பொறுத்தது. எல்லோரும் விரும்புவது சுகப் பிரசவம். வலியே தெரியாமல் பிரசவிப்பதை விட சுகப் பிரசவம் வேறு என்ன இருக்க முடியும்?

[மேலும் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு டாக்டர் பாலா விடைபெறும் முன்னர், எபிடியூரல் அனஸ்தெஸியாவைக் கையாளத் தேவைப்படும் உபகரணங்கள் அடங்கிய மருத்துவப் பெட்டி ஒன்றை டாக்டர் ஞானசௌந்தரிக்குப் பரிசாக வழங்கினர்.]

உரையாடல், தொகுப்பு, படங்கள்: 'சிக்கி'

# கடலுக்குள் ஜூலி

புஷ்பா தங்கதுரை

கடலில் அதிகப்பட்ச ஆழம் ஆறேமுக்கால் மைல், 'மரியனாஸ் ட்ரெஞ்ச்' என்று சொல்லப்படும் இந்தக் குழி பசிபிக் கடலில் இருக்கிறது.
ஜியார்ஜ் பீல் எழுதிய 'தி ஸீ'

## 23

ராம்சந்துக்கு ஆச்சரியம் மிகையாக, கிரேனின் சக்தியை அதிகமாக்கினான். முதல் சில நிமிடம் அந்த மிதப்பு அசரவில்லை. பிடிவாதம் பிடித்தது. கிரேனின் உக்கிரம் அதிகமாக்கப் பட்டதும் மெள்ள ஓர் அசைவு. பிறகு ஒரு டக் —ஆஃப்— வார்! சங்கிலி விறைக்க, அது அறுபடுமோ என்று ராம் சந்த் கவலை. தண்ணீரின் மேற்பரப்பை பார்த்துக்கொண்டே இருந்தான்.

கிரேனின் இழு சக்தியைச்சிறிது தளர்த்தி பிறகு மீண்டும் படிப்படியாக மேலே கொண்டு செல்ல மிதப்பு மெல்ல மேலே எழும்பியது.

ராம்சந்த் ஊகித்தான். மிதப்பு எப்போதோ அறுபட்டிருக்கிறது. அதன் சங்கிலியோடு நகர்ந்து கொண்டே போயிருக்கிறது. இவ்வளவு தூரம் வந்த பிறகு சங்கிலியின் நுனி ஏதோ ஒரு பொருளில் மாட்டிவிட்டது. அந்தப் பொருளுடன் சங்கிலி இப்போது மேலே வந்து கொண்டிருக்கிறது. கிட்டத் தட்ட ஒரு பாதாளக் கரண்டியின் வேலையை இந்தச் சங்கிலி செய்கிறது.

ஹோ ஹோ

எல்லோரும் உற்சாகமாகக் கத்தினார்கள்.

---

19.5.80 திங்கள் மாலை திருச்சி நகரில் விவசாயிகள் பேரணி நடந்தது. அவர்களுடைய நியாயமான கோரிக்கைகளை வற்புறுத்துவதில் தவறில்லை. ஆனால் அவர்கள் எழுப்பிய கோஷங்கள் பொது மக்களைப் புண்படுத்தி விட்டன.

1. காரோட்டம் நின்றுபோனால்....உங்கள் தேரோட்டம் ஏதடா?
2. சோறு போடுவது யாரடா? சோறு போடும் உங்கப்பன்டா!
3. கோழி வளர்ப்பது நாங்கடா! முட்டை தின்பது நீங்கடா!
4. ஆடு வளர்ப்பது நாங்கடா. அறுத்துத் தின்பது நீங்கடா!

இப்படியே 'டா' போட்ட கோஷங்கள் -முகுந்தன்

---

இரண்டு மூன்று நிமிடங்களில் சங்கிலி பூராவும் மேலே வர, அதன் அடியில் கொக்கி போல் மாட்டிக் கொண்டு இருப்பது என்ன?

தளத்தில் வைத்தார்கள்.

ஒரு நீண்ட சதுரப் பொருள். மேலே களிம்பும், பவழப் படிவங்களும்.

சங்கிலியின் கண்ணியில் அந்தப் பொருளின் கொக்கி போன்ற பிடிப்பு வசமாக மாட்டியிருந்தது. அதனால் சங்கிலியோடு இழுபட்டு மேலே வந்து விட்டது.

சுத்தியலையும், உளியையும் கொண்டு வேலை செய்ய, சீக்கிரம் ஒரு துரு ஏறிய பெட்டகம் தோற்றமாயிற்று. பழங்காலப் பெட்டகம்.

மூடி எங்கே என்று கண்டுபிடிக்க முடியவில்லை. உத்தேசமான ஒரு இடத்தை உடைத்தார்கள். உள்ளே சரக் களிமண்ணும் களிம்புமாக ஏதோ பொருள்களை வெளியே எடுத்தார்கள்.

மண்ணைக் கழுவி, களிம்புகளை வழிக்க, ரொகோகோ கலையுடன் கூடிய டின்னர் பிளேட்டுகள்! மட்டி யிருந்தன. பிளேட் நடுவில் இலையில்லாக் கறை. அதன் அடியில் மட்கிய எழுத்துக்கள்.

என்ன எழுத்துக்கள் அவை?

ராம்சந்திடம் சக்தியான அமிலங்கள் இருந்தன. பிளேட்டுக்களை ஒரு சிங்கில் வைத்து அமிலத்தை லேசாகப் பூசிவிட்டு, தண்ணீரில் கழுவி எடுக்க—

—மல்லிக்!

உற்சாகம் பீறிய குரல்.

மல்லிக் துள்ளி வந்தான்.

—பாரு! ஜூலி காலண்ட்.

மல்லிக் மூச்சை நிறுத்திப் பார்த்தான். அந்தப் படம் ஒரு கப்பலின் படம். அதன் அடியில் அந்த வார்த்தைகள். எச். எம். எஸ். ஜூலி காலண்ட்!

உய்யோ என்று விசில் அடித்தான் மல்லிக். ராம்சந்தின் முகத்தில் மகிழ்ச்சி மயம். சம்பகா இருவரையும் பார்த்துப் பிரமித்து நின்றாள்.

—சம்பகா! ஜூலி கிடைச்சட்டா! ஜூலி கிடைச்சட்டா! என்று கத்தினான் ராம்சந்த்.

கப்பல் பெயர் தரித்த பிளேட்டுகளை விசேஷமாகத் தருவித்து டின்னர் உபயோகத்துக்காக அந்நாளில் வைத்திருப்பார்கள். பிரசித்தி பெற்ற நிறுவனங்கள்தான் இந்தப் பிளேட்களைத் தயார் செய்வது வழக்கம்.

மூவரும் ஆளுக்கொரு பிளேட்டைத் தூக்கிக் கொண்டார்கள். வட்டமாக ஒரு ஆட்டமே ஆடினார்கள்.

ஆரவாரம் பெருகி வழிந்த பிறகு.

—நாம்ப உடனே கீழே போறோம். கம் ஆன்! டைவிங் சூட் போட்டுக்குங்க.

மூன்று பேரும் போட்டுக் கொள்ள ரூபாவை அம்போ என்று விட்டு விட்டு மூவரும் நீருக்குள் குதித்தார்கள்.

மூன்று வீரர்கள் போல் இணையாக நீருள் சொருகினார்கள்.

படிப்படியாகக் கீழே இறங்கி, அறுபதடி தாண்டியதும் மேலே இருந்து வந்துகொண்டிருந்த மெல்லிய வயலட் வெளிச்சமும் ஒரு மனோகர ட்விலைட் காட்டியது. ராம்சந்த் டார்ச்சை அழுத்தினான்.

சைகை காட்டி இன்னும் இறங்கிக் கொண்டே போனான்.

கீழே, கீழே, கீழே.

தரையை அடைந்தபோது எல்லாம் நிசப்த மயம். தாயின் கர்ப்பம் இப்படித்தான் இருந்திருக்கும்.

கையில் உள்ள காம்பஸ் கடிகாரத்தைப் பார்த்துத் திசை அறிந்து ராம்சந்த் மெள்ள நீந்த இருவரும் தொடர்ந்தார்கள்.

கடைசியில்.....

ஒரு இடத்தில் நின்று ராம்சந்த் சுற்றிவர வெளிச்சம் பீச்சினான். எங்கே அந்த மேடு?

ஒவ்வொரு திசையாக அடித்து வர, வடகிழக்கே வந்ததும், ஆகா, அது என்ன?

அற்புதமான காட்சி! திரைக்குள் ஓர் அரச குமாரி போல் இருக்கும் பெரிய உருவம் என்ன?

ஜூலியா?

டார்ச்சின் வெளிச்சம் நீரைத் துளைத்துக்கொண்டு பாய, எங்கும் லேசான மினு மினுப்பு.

ஒரு பவழப் படிவமான வடிவத்துடன் தரையில் ஒருக்கணித்துப் படுத்துக் கொண்டிருந்தது ஒரு கப்பல்!

ஜூலிதானா?

பவழப் படிவங்கள் கிட்டத்தட்ட ஒரு முழுக் கப்பல் உருவத்தையும் காட்டியது.

எல்லோரும் சிலிர்த்தார்கள். திகிலும் அதிசயமும் கலக்க அந்த உருவத்தைப் பார்த்தார்கள். முகங்களில் தெய்வத்தைக் கண்டது போல் பிரமிப்பு!

ராம்சந்த் சுற்றியும் டார்ச்சை அடித்தான். ஒரு விஷயம் ஆச்சரியமாக அவர்கள் கண்ணில் பட்டது.

ஜூலி (ஜூலிதானா?) இருந்த இடம் ஒரு சாய்மானப் பள்ளமாக இருந்தது.

அந்தப் பள்ளத்து விளிம்பில் அது ஒட்டி நின்று கொண்டிருந்தது.

பள்ளத்தில் டார்ச் அடித்துப் பார்த்தால் வெளிச்சம் சிறிது தூரத்தில் மறைந்து விட்டது. ஆழம் தெரியவில்லை.

ராம்சந்த் கப்பலைச் சுற்றி வந்தான். ஒரு பவழ முகட்டில் கப்பல் படுத்திருந்தது. கப்பலின் ஏராள கனம் அதைப் பள்ளத்தில் உருள விடாமல் செய்திருந்தது.

கப்பல் சாய்ந்திருக்கும் பக்கம் போக வேண்டாம் என்று ராம்சந்த் எச்சரிக்கை காட்டவும்,

எல்லோரும் பக்கவாட்டில் சென்று ஆய்ந்தார்கள்.

கீழே தரையில் அநேக இடிபாடுகள் சிதறிக் கிடந்தன.

அவைகளைப் பார்த்தால் சின்னச் சின்ன ஜந்துகள் போல் தெரிந்தன.

ராம்சந்தின் டார்ச் எல்லா இடங்களையும் வெளிச்சமாக்கியது.



ஜூலியின் போர்ட் சைடில் பெரிய துவாரம் விழுந்திருப்பதும், அதன் மூலமே இந்த இடிபாடுகள் சிதறி இருப்பதும் தெரிந்தது.

மூவரும் இடிபாடுகளைக் கோத ஆரம்பித்தார்கள். வெவ்வேறு நீட்டங்களில் இலையில்லாப் பொருட்கள் கிடைத்தன. பவழப் படிவங்கள் அவற்றை மூடியிருந்தன.

ராம்சந்த் ஒரு குறிப்பிட்ட இடிபாட்டைத் தோண்ட ஆரம்பித்தான்.

அது ஒரு சின்ன மேடு. தோண்டும்போது ஒரு கூடுபோல் அமைந்திருப்பது தெரிந்தது.

அதை மூவருமாக உடைத்து எடுக்க, உள்ளிருந்து பல ஜவ்வு ஜந்துக்கள் பிறீக் கொண்டு ஓட.

இதென்ன கட்டிகள்?

ஒரு கட்டியை ராம்சந்த் எடுத்தான்.

என்ன கலம்?

மேலே களிம்பு மூடி அதன் சுயஉருவம் தெரியவில்லை.

அதற்குள் இரண்டாவதைச் சம்பகா எடுத்தாள்.

அது நடுக்கட்டியாக இருந்ததால் ஆச்சரியமாகக் களிம்பு அதிகம் பற்றவில்லை.

சம்பகா வெளியில் அதைத் தூக்க, அது மெல்லிதாகப் பளிச் பளிச் என்று ஒளி காட்டியது.

மாஸ்க்கினுள் அவள் கண்கள் பெரிதாகத் தெரிந்தன.

மல்லிக் அதைப் பார்க்க, தங்கம் என்று உணர்ச்சியில் ஒரு தந்தி பறந்தது.

ராம்சந்த் பார்த்தான்.

துள்ளி, கையை உயரே தூக்கினான்.

சம்பகாவை நோக்கி வெற்றிச் சைகை காட்டினான்.

ஐந்து கட்டிகளையும் ஸ்லிங்கில் கட்டி விட்டு,

மூவரும் கப்பலை நெருங்கினார்கள். என்ன பயபக்தி! என்ன விசுவாசம்! பொத்தல் வழியே உள்ளே எட்டிப் பார்த்தார்கள்.

ராம்சந்த் டார்ச்சை அடித்தான். உள்ளே அந்த ஹல் பகுதியில் ஏகப்பட்ட குவி பாடுகள். ஓர் அம்பாரமாக அவை தெரிந்தன.

மெல்ல உள்ளே போக ஆச்சரியமாக ஒரு கப்பலின் ஹல் கிட்டத்தட்ட முழுசாகத் தெரிந்தது.

நடைபாதைகள், உடைந்த ஏணிகள், கொக்கிகள், செப்பு ஃபிட்டிங்கள், நொறுங்கிய காபின்கள், பாதி தெரியும் வீல், மாஸ்டின் அடிப் பாகங்கள், சில முழுமையான அறைகள், சாப்பாட்டுப் பாத்திரங்கள், தட்டுகள், இரண்டு மண்டை ஓடுகள், அங்கங்கே இரும்புப் படிகள், மதுப் பாட்டில்கள் எல்லாம் தெரிய வந்தன.

வழியில் உள்ள இடிபாடுகளை அவ்வப்போது எடுத்துச் சோதித்துக் கொண்டே ராம்சந்த் மேலே போனான். ஒரு இடத்தில் நீண்ட சதுர பிளேட் போல ஏதோ கிடைக்க, கையில் எடுத்துப் பார்த்தான்.

செம்புப் பிளேட். மண்ணைக் கையில் வழித்துப் பார்க்க, டேபுடி காப்டன், "எச். எம். எஸ். ஜூலி காலண்ட் என்று எழுத்துக்கள் பள்ளம் பறித்தலாகத் தெரிந்தன.

கப்பல் ஜூலிதானா என்று இருந்த கொஞ்ச நஞ்ச சந்தேகமும் இப்போது தீர்ந்து விட்டது.

மல்லிக்கிடம் அதைக் காட்ட, அவன் உணர்ச்சியுடன், அந்தப் பிளேட்டைத் தொட்டு மாஸ்கில் ஒத்திக்கொண்டான்.

பத்து நிமிடத்தில் அந்தக் கப்பல் முழுவதையும் ஆய்ந்தார்கள்.

மேல் தளங்கள் யாவும் உடைந்து விட்டன.

கீழ்த் தளம் இரண்டும் பாதி இடிபாடுகளில் கிடந்தது.

கடைசித் தளத்தில் வெள்ளி, தங்கம் வைத்திருக்கும் பொக்கிஷ அறை அம்பாரமான இடிபாடுகளில் கிடந்தது.

அந்தத் தளத்துள் இறங்க ஆவல் இருந்தும் ஆபத்து என்று நினைத்து அதைத் தவிர்த்தான்.

கடலுக்குள் எந்த இடிபாடும் திடீரென்று மேலே சரிந்துவிடத் தயாராக இருக்கலாம்.

ஆய்வை ஒருவாறு முடித்ததும் போகலாம் என்று ராம்சந்த் சைகை காட்டினான். மனமில்லாமல் மேலே ஏறத் தொடங்கினார்கள்.

ஒரு மணி நேரத்துக்குப் பிறகு நூபாலில் ஏறி அமர்ந்து ஆசுவாசப்பட்டு, டைவிங் சூட்களைக் களைந்துவிட்டு, அந்த ஸ்லிங் கயிற்றை மேலே இழுத்தார்கள்.

ஐந்து நிமிடங்களில் ஸ்லிங் மேலே வர, தளத்தில் அதைப் பரத்திப் பார்த்தார்கள். ஐந்தும் தங்கப் பாளங்கள். செங்கல் போல நீள அகலம். பாங்க் ஆஃப் இங்கிலாந்து என்று அதில் முத்திரைகள்.

மல்லிக் கண்கள் தழுதழுத்தன. கீழே குனிந்தான். அவைகளை முத்தமிட்டான்.

பின்னர் ராம்சந்த் ஒரு பாப் இசையைப் போட, மூவரும் எழுந்து கை கொட்டித்

---

## கட்டுப்பாடு!

ரஜினிகாந்த் தமது பழக்க வழக்கங்களைப் பற்றிக் கூறுகிறார் "ஒரு காலத்தில் எல்லாமே அதிகமாக இருந்தது. இப்பொழுது எல்லாவற்றையும் குறைத்து விட்டேன். இது ஒன்று தான் பாக்கி! இதையும் விட்டுவிட முயற்சி செய்கிறேன்." அவர் குறிப்பிட்டது தம் கையிலிருந்த சிகரெட்டை! ஒரு நாளைக்கு ஐந்துக்குமேல் குடிப்பதில்லை என்று கட்டுப் படுத்திக் கொண்டிருக்கிறார் அவர்.

—ருக்மிணி ராமச்சந்திரன்



தான்தோன்றித் தனமாக ஆட்டம் போட்டார்கள்.

மல்லிக்கிற்கு இமய உச்சியை அடைந்த உணர்ச்சி. வாழ்க்கையில் எதிர் பாராத அதிர்ஷ்டம் முத்தமிட்டு விட்டது. அவன் செய்த முயற்சிகளுக்கெல்லாம் கடைசியில் பலன் கிட்டிவிட்டது.

சம்பகாவை அடிக்கடி பார்த்தான். அவன் எப்போதும் புன்னகை வீசிக் கொண்டிருந்தான்.

வாழ்க்கையில் ஒரு விநோத அனுபவம் அவனை ஆட்டி வைப்பது போலிருந்தது.

அவன் வாழ்க்கை முறை மாறுவதற்கே ஒரு வழி திறக்கிறது என்று நினைத்தான்.

மல்லிக்கின் மீது அவனுக்கு இப்போது எவ்வளவு நம்பிக்கை பிறந்தது!

உலகத்திலேயே ஹீரோ அவன் என்று தோன்றியது. அடிக்கடி அவனைக் கடைக் கண்ணால் பார்த்தாள்.

தனக்குள் நிறையச் சிரித்துக் கொண்டாள்.

ராம்சந்த் இதற்குள் ஒரு நினைவுடன் காபினுள் உட்கார்ந்து, யந்திரத்தை முடுக்கி வைத்து, சூபாவைச் சிறிது நகர்த்திக் கொண்டு போனான்.

பிறகு எக்கோ சவுண்டரில் ரீடிங் வந்ததும் 'ஆ' என்று துள்ளினான்.

மல்லிக் ஓடிவந்து என்ன என்றான்.

—ஜூலி உட்கார்ந்திருக்கும் சரிவு பக்கத்தில் ஒரு பள்ளம் இருக்கிறதே!....

—ஆமாம்! டார்ச் அடித்துப் பார்த்தோமே!

—அதன் ஆழம் மூன்று மைல்!

மல்லிக் திடுக்கிட்டான்.

—மூணு மைல்?

—ஆமாம்! உலகத்திலேயே இந்த ஆழம் மூணாவதாகவோ நாலாவதாகவோ இருக்கணும். இதுவரையும் எந்த சர்வேயிலும் சார்ட் ஆனதில்லே! இது நம்ப கண்டுபிடிப்பு!

-'ஜூலி'ஸ் டிரென்ச்'னு நாம்ப பெயர் சூட்டலாம்.

—ஓ! பொருத்தம். ஜியாகரபிகல் சொஸைட்டிக்குத் தெரியப்படுத்துவோம். ஆனா அதுக்கு முன்னாலே தங்கத்தை எல்லாம் எடுத்துடணும். பிறகுதான் மற்றதெல்லாம்....

எல்லோரும் ஒரு அவசர விருந்து தயாரித்து அவசரமாகச் சாப்பிட்டார்கள்.

பின்னர் இரண்டாவது படகுக்கும் வயர்லெஸ் அனுப்பி, கோபியை, வரவழைக்க அவனும் அவர்கள் சந்தோஷத்தில் கலந்து கொண்டான்.

இரவு நால்வரும் காபின் விளக்கை எரித்துக் கொண்டு, ஜூலியின் அனைத்துப் பொக்கிஷத்தையும் மேலே கொணர்வது பற்றித் திட்டங்கள் போட்டார்கள்.

வேறு யாருக்கும் மூச்சுகூட விடாமல், இரண்டு படகுகளை வைத்தே பல மாதம் கஷ்டப்பட்டாலும் பொக்கிஷங்கள் முழுவதையும் எடுப்பது என்று தீர்மானித்தார்கள்.

எளிதில் எடுக்கும் முறைகளை அலசிவிட்டுப் படுக்கப் போனார்கள்.

நடு நிசி! அலைகளின் உலைப்புகள். மற்றப்படி நிசப்தம்.



## புதுமைப் பழக்கம்

ஏ. வி. எம். தயாரிப்பாக ''முரட்டுக் காளை'' திரைப்படம் உருவாக்கி வரும் சகோதரர்கள், சரவணன், குமரன், பாலசுப்பிரமணியம் ஆகியோரில், ஏ. வி. எம். சரவணனுக்குப் புதுமையான ஒரு பழக்கம் இருக்கிறது. அவருடைய அறைக்குள் யார் நுழைந்தாலும் அவரைப் புகைப்படமெடுத்து வைத்துக் கொள்வார். இதற்காகவே கேமிரா ஒன்று எப்போதும் அவரது மேஜையின் வலப்புற இழுப்பறையில் தயாராயிருக்கும். கிட்டத்தட்ட மூவாயிரத்துக்கு மேற்பட்ட படங்கள் அடங்கிய ஆல்பமும் அதே மேஜை இழுப்பறையில் இருக்கிறது.

- குமார்

---

மல்லிக் விழித்திருந்தான்.

தூக்கம் வரவில்லை.

எவ்வளவு பெரிய கண்டுபிடிப்பு அது?

அவன் வாழ்க்கையைப் பொறுத்தவரையில் அது மகத்தானது.

சிந்தனைகள் மாறி மாறி வர, அதன் மகிழ்ச்சியில் அவனுக்குத் தூக்கம் கொள்ளவில்லை.

அது என்ன சத்தம்? யாரோ தண்ணீருக்கு வெளியே சிலிர்ப்பது போல!

கூர்ந்து கேட்டான்.

தொடர்ந்து தண்ணீர் அலைபடும் சத்தம். சில அசைவுகளின் சத்தம்.

மல்லிக் உஷாரானான்.

நுனிக் காலில் எழுந்திருந்து நின்றான்.

காபின் சன்னல் பக்கம் வந்தான்.

அந்த வெளித்தளத்தைப் பார்க்க மின் கடர்கள் எங்கும்! கடலில் ஃபாஸ்பரஸ் நீலம். இராதிக்கு மேல் வரும் உருவம் என்ன?

அதை நிச்சயிக்கு முன் திடீரென்று அலாரச் சப்தமும், வெளித் தளத்தில் ஆட்டோமாடிக் வெளிச்சங்களும்.

ராம்சந்த் யமகாதகன். படகைச் சுற்றிப் பாதுகாப்பு வேலி வைத்திருந்தான்.

டபீர்!

ராம்சந்தின் காபினிலிருந்து துப்பாக்கி போல் சத்தம்.

அந்த உருவம் ஆ! என்று வீறலுடன் விழ, அது பெண்ணா? - மல்லிக் திடுக்கிட்டான்.

(அடுத்த இதழில் முடியும்)




# கருகு பதில்கள்!

✖ ஏ.ஜி. அசோக்ராஜா, தஞ்சை-1

கே. பாரதீய ஜனதா கட்சித் தலைவர் வாஜ்பாய் பற்றிச் சில வரிகள்?

ப: வாஜ்பாய் நல்ல கவிஞர், நகைச்சுவையாளர், அபாரமான சொற்பொழிவாளர். அவரது சொற்பொழிவைச் சிறந்த சங்கீதக் கச்சேரியை ரசிப்பது போல் ரசித்து அனுபவிக்க முடியும். தங்கு தடை இல்லாமல், எதுகை மோனையுடன் வார்த்தைகள் வசனமாகவும் வரும்; கவிதையாகவும் பொழியும்.

✖ ஆ. சீனிவாசன், திருச்செந்தூர்

கே: கடுகும் தற்பெருமையும் என்று நான் ஒரு புத்தகம் எழுதினால், நீங்கள் முன்னுரை எழுதித் தருவீர்களா?

ப: எழுதித் தருவேன். அச்சடித்து வெளியிட உங்களுக்குக் கட்டுப்படியாகுமா என்பது கேள்வி. ஆயிரக் கணக்கான ப்க்கங்களுக்குப் போருமே, என்னதான் நான் சுருக்கி எழுதினாலும்!

✖ கே. கணேஷ் - கே. ரமேஷ், புதுடில்லி 23

கே: இன்றைய மாணவனுக்கு உங்கள் அறிவுரை என்ன?

ப: அதிகமாக சினிமா பார்க்காதீர்கள். ப்பார்த்த, பார்க்கத் தவற விட்ட சினிமாக்களைப் பற்றி விடாமல் பேசிக் கொண்டிருக்காதீர்கள். இதே மாதிரி ஸ்போர்ட்ஸ் விஷயத்திலும். விளையாடுங்கள். விளையாட்டைப் பற்றி அரட்டை அடிக்காதீர்கள். நிறையப் படியுங்கள். ஆயிரம் ஆயிரம் ஆண்டு மனிதனின் அறிவும், அனுபவமும் அச்சடித்த புத்தகத்தில் 'கிஃப்ட்' மாத்திரைகள் மாதிரி கிடைக்கின்றன. படியுங்கள். கவலை இல்லாத வயதில் நிறையப் படியுங்கள். ஃபிக்சட் டெபாசிட்டில் போட்டது போல் உங்கள் அறிவு வட்டியுடன் பெருகும்.

✖ எம். எம். ஜெஃப்ரி, களத்தூர் (வ. ஆ.)

கே: அன்னை தெரசாவைச் சந்திக்க என்ன செய்ய வேண்டும். அவரது சென்னை முகவரி என்ன?

ப: அன்னை தெரசா சாதாரணமாகக் கல்கத்தாவில் தான் இருக்கிறார். அங்கு போனால் எளிதில் சந்தித்து விடலாம். மிஷனரீஸ் ஆஃப் சாரிடி என்பது அவர் நடத்தும் தொண்டு நிலையத்தின் பெயர்.

✖ நடனம், போபால்

கே: திரு அருட்பாவிற்கு 'விளம்பர உதவி' தேவையா?

ப: என்ன ஸார், நடனம். அருட்பாக்களைப் பலரும் படித்தறியச் செய்கிறார்களே என்று மகிழாமல் இப்படிக் கேட்கிறீர்கள்? 'விளம்பர உதவி' என்பது பழக்கத்தில் வந்துள்ள வாசகம். அதற்குப் பதில் 'பணிவுடன் வெளியிடுபவர்' என்று எண்ணினால் இந்த மாதிரிக் கேள்விக்கு இடமிருக்காது.



✖ கே. பி. சிங், அரகண்ட நல்லூர்

கே: நல்ல நண்பன் எங்கே கிடைப்பான்?

ப: நல்ல நண்பனுக்கு எங்கும் நல்ல நண்பன் கிடைப்பான்.

✖ வி. எஸ். ராஜா, நாகை

கே: ஒசிப்பொடி வழக்கம் உண்டா?

ப: கிடையாது. உம்மை யாராவது ஒசிப் பொடிக்காக அணுகினால், தட்சிணாமூர்த்தி தேசிகரின் பாட்டைப் பாடுங்கள். பாடல் இதோ:

ஒசிப்பொடி என்றொரு நாள்
உனக்களித்தால்
நீ சற்றும் அச்சமின்றி நித்தம் நித்தம்
—யாசித்து
அடிக்கடி சும்மா வந்தலட்டுகிறாய் சீச்சீ
பொடி கொடுப்பதில்லை யினிப் போ!

✖ சே. ராஜேஸ்வரன், பட்டுக் கோட்டை

கே: கதையைப் படிக்கும் போது தான் கதா பாத்திரங்களைக் கற்பனை செய்து கொள்ளுகிறோமே, பிறகு கதைக்கு ஓவியம் எதற்கு?

ப: தேவை என்றோ தேவையில்லை என்றோ சட்டென்று கூற முடியாது. சில கதைகளை ஓவியத்தின் அழகால் கவரப்பட்டுப் படித்து ஏமாந்திருக்கிறேன். அம்மாதிரியே படங்கள் சுமாராக இருந்ததால் பல கதைகளைப் படிக்காமலே விட்டிருக்கிறேன். கோபுலு மாதிரி ஓவியர்கள் படம் போட்டால் கதைக்கு ஜீவன் கூடுகிறது. (கதாசிரியர்களுக்கு உரையாசிரியர் கோபுலு என்று ச. சமுத்திரம் சும்மாவா சொன்னார்.) அமரர் கல்கியின் கதைகள் பெற்ற வரவேற்புக்கு மணியம் வரைந்த படங்களும் ஓரளவு காரணம் என்பதை மறுக்க முடியுமா?

✖ சுதா மணிமேகலை, வேலூர்

கே: கடுகு பதில்களைத் தொகுத்து வெளியிடுவீர்களா?

ப: நான் தொகுத்து வெளியிடுவேன். வாசகர்கள் எனக்குக் குத்து விடமாட்டார்கள் என்று உத்தரவாதம் தருவீர்களா?

✖ எம். சம்பத், வேலாயுதம் பாளையம்

கே: சங்கரா பரணம் - உதிரிப்பூக்கள் இரண்டையும் ஒப்பிடுங்களேன்!

ப: சங்கராபரணம் ஒரு மனோரஞ்சித மலர். உதிரிப் பூக்கள் ஒரு அற்புதமான கனகாம்பரம்!

ரூ. 5 பரிசு பெறுபவர்

**சே. ராஜேஸ்வரன்,**
**61, சவுக்கண்டித்தெரு**
**பட்டுக்கோட்டை - 614601**

லட்சுமி மாமியின் வீட்டிலிருந்து திரும்பும் போது, என் மனசு ஒரு நிலையிலேயே இல்லை.

அதுவும் அந்த விலாசினியின் முகம்! ''என் ஸ்டூடண்ட்ஸ்ஸ"களுக்கு எல்லாம் கல்யாணம் ஆகிக் கொண்டே வரது. ஒருத்தியின் குழந்தைக்கு ஆண்டு நிறைவு கூட முடிந்து விட்டது!'' என்று மெல்லச் சொன்னாள். அந்தக் குரலில் தொனித்த ஏக்கமும் விரக்தியும் என் மனசைப் பிசைந்தன.

''வர சித்திரைக்கு விலாசினிக்கு 28 வயசு முடியறது. ஒரு ஜாதகமும் பொருந்த மாட்டேன் என்கிறதே!'' என்றாள் மாமி.

''ரொம்பத்தான் ஜாதகம் பார்க்கிறார் மாமா. ஏதாவது ஒன்று இருந்தால் ஒன்று இருக்காது. கொஞ்சம் விட்டுக் கொடுக்கத் தான் வேணும்'' என்றேன்.

சற்று உரக்கவே பேசி விட்டேன் போலிருக்கிறது. கூடத்திலிருந்து மாமா வந்தார். ''என்ன ரகு சொல்லறே?'' என்றார் நிதானமாக. அந்த நிதானமே என்னை லேசாக அச்சுறுத்தியது.

'':இல்லை. ரொம்ப பார்க்கிறீர்களே — கொஞ்சம் காம்ப்ரமைஸ்'' என்று தடுமாறினேன்.

''ஜாதகம் பார்த்தால் சரியாகப் பார்க்க வேண்டும். மனிதர்கள் நல்ல இடமா, நம் பெண்ணை நன்றாக வைத்துக் கொள்வார்களா எல்லாம்தான் யோசிக்கணும். உன் அக்கா ஜாதக நிலை தெரியாமல், ஏதோ கம்பெனியில் பெரிய ஆபீசர்னு ஓடிப் போய் பெண்ணுக்குக் கல்யாணம் செய்தாள். இப்போது அந்தக் கம்பெனியே மூழ்கிக் கிடக்கிறது'' என்று



சொல்லி என்னை ஒரு முறை முறைத்தார். 'நீ எவ்வளவு சின்னவன், எனக்குச் சொல்ல வந்து விட்டாயே!' என்பது போல் பார்த்தார்.

கல்யாணம் செய்து கொண்டு சந்தோஷமில்லாதவர்கள், புக்ககத்தில் பாடாய்ப் படுகிறவர்கள், டைவர்ஸ் செய்தவர்கள்— இத்தகையவர்களின் கதைதான் மாமாவுக்கு மனப்பாடம் ஆகியிருக்கிறது. தாமாகக் கல்யாணம் செய்து கொண்டு எத்தனை பேர் மகிழ்ச்சியில் திளைத்துப் பாங்காகக் குடித்தனம் நடத்தவில்லை. அவர்கள் ஏன் மாமா நினைவுக்கு வருவதில்லை என்று மனத்துக்குள்ளேயே கேட்டுக் கொண்டேன்.

மாமியின் வற்புறுத்தலுக்கு இணங்க நானும் சில ஜாதகங்களை வாங்கிக் கொடுத்தேன். முதலில் மாமாவே அதை 'ஸ்க்ரீன்' செய்வார். பிறகு, இரண்டு மூன்று ஜோசியர்களிடையே காட்டி, பொருத்தம் என்று சொல்லி, பிள்ளை வீட்டுக்காரரும் சம்மதம் தெரிவித்து —

ஊஹூம். இதுவரை பெண் பார்க்கும் அளவுக்குக் கூட ஒரு 'பிள்ளையும்' வரவில்லை.

டி.. விட். வாங்கிப் பெரிய புரொபசராக இருக்கும் மாமா, இந்த ஜோசியத்திலே ஏன் இத்தனை பித்துப் பிடித்தவராக இருக்கிறார்? என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனாலும் 'என் ஸ்டூடண்ட்ஸுக்கெல்லாம் கல்யாணமாகி விட்டது' என்ற விலாசினியின் சோகம் விரவிய குரல் — என்னை மிகவும் உறுத்தியது.

வீட்டுக்கு வந்ததும் மனைவி கமலாவிடம் சொன்னேன்.

''உங்களுக்கு என்ன வந்தது? அவர்கள் ரொம்பப் பார்க்கிறார்கள் என்பது தெரிந்த விஷயம் தானே! ஒரு தரம் சொல்லி மூக்கு உடைபட்டது போதாதா?'' என்றாள்.

''சேச்சே, மாமாவுக்கு என்னைக் கண்டிக்க முழு உரிமை இருக்கிறது. விலாசினியைப் பார்த்தால் தான் பாவமா இருக்கு!''

''என்ன செய்ய? படிக்க வைச்சாச்சு, எம்.எஸ்ஸி வரை. படிச்சாலே தைரியம் வந்து விடும். அதுவும் வேலை வேறு பார்க்கிறாள்.''

நான் சட்டென்று நிமிர்ந்தேன். அதுதான் காரணமோ? விலாசினி மாசம் பிறந்ததும் கனையாகக் கொண்டு வரும் சம்பளம்தான் மாமா தீவிரமாக வரன் பார்ப்பதற்குத் தடையாக இருக்கிறதோ? ஒரு நிமிடம்தான் இது போல் நினைவு ஓடிற்று. மறு நிமிடம் என்னை நான் திட்டிக் கொண்டேன். 'சே! வேறு எந்த விஷயத்தில் மாமாவைக் குறை சொன்னாலும், இதில் குற்றம் கூற முடியாது. தன் சம்பளத்தைத் தனியாகப் பாங்குக் கணக்கில் போட்டு வைக்கிறாள் விலாசினி. ஒரு நாள் பாஸ் புத்தகத்தைக் கூடக் காண்பித்தாள்.'

கமலா வேறுவிதமாக யோசித்தாள். ''பிள்ளைக்குக் கல்யாணமாகி விட்டால் தன்னை மறந்து விடுவானோ என்கிற பயம், சில அம்மாமார்களுக்கு உண்டு. அது போல் ஒரு 'பொஸஸிவ்னஸ்' மாமாவுக்கும் இருக்கிறதோ என்னமோ?''

நான் சிரித்தேன். ''ஆபீசிலிருந்து பத்திரிகை கொண்டு வருகிறதை இனிமேல் நிறுத்தி விடுகிறேன். நீ ரொம்ப எனக்கு மேல் படிக்கிறாய்!''

இருந்தும் கமலா சொன்னது மனத்தை நெருடிக் கொண்டிருந்தது.

இந்தச் சமயத்தில்தான் மாமியிடமிருந்து போன் வந்தது. எட்வர்ட் எலியட்ஸ்

---

# புதிய தலைமுறை புதிய தலைமுறை

**திரு என். வேங்கடரமணி**

*(ஜெனரல் மானேஜர், டைரக்டர், இந்தியா பிஸ்டன்ஸ் லிமிடெட்)*

அமால்கமேஷன்ஸ் நிறுவனங்களுள் ஒன்றான இந்தியா பிஸ்டனின் ஜெனரல் மானேஜர் திரு என். வேங்கடரமணிக்கு மிகப்பிடித்தமான பொழுது போக்கு புத்தகங்கள் படிப்பதுதான். ஆர்தர் ஹெய்லி, இர்விங் வாலஸ் என்றால் விடமாட்டார். ஒரு மில்லியன் டன் எண்ணெய்க் கப்பல் ஒன்றை ஹைஜாக் செய்து கொண்டு போவது பற்றிய (''டெவில்ஸ் ஆல்டர்நேடிவ்'') பிரடரிக் ஃபார்ஸைத்தின் நாவல் அண்மையில் இவரைக் கவர்ந்த நூல்.



தில்லி பல்கலைக் கழகத்தில் கணிதத்தில் பி.எஸ்ஸி. பட்டம் பெற்றபோது ஐ. ஏ. எஸ். வேலைக்குச் செல்வதே இவருடைய நோக்கமாக இருந்ததாம். ஆனால், பின்னர் லண்டனில் பொறியியல் பி.எஸ்ஸி. பட்டம் பெற்று இந்தியாவில் மூன்று ஆண்டுகள் தொழில் துறையில் பணியாற்றிய பின், அந்த நேரடி அனுபவத்தை வைத்து மீண்டும் லண்டன் பல்கலைக் கழகத்தில் பி.எச்டி. பட்டம் பெற்றார்.

லண்டன் பல்கலைக் கழகத்தில் இவர் படித்தபோது முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ற மூவரில் இந்தியர் இவர் ஒருவர் தான், எலிஸபெத் ராணியாரின் அன்னையார் கரங்களிலிருந்து பட்டம் பெற்றதைப் பெருமையுடன் நினைவுகூர்கிறார்.

இந்தியா பிஸ்டன் நிறுவனத்திலிருந்து, மூன்று இன்ஜினீயர்களை, இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னாலஜியில், பி.எச்.டி. பட்டப் படிப்புக்கு அனுப்பியுள்ளனராம். வேலையும் பார்த்துக் கொண்டு படிப்பையும் தொடரும் இந்த முறையில் செயல் முறை அனுபவம் மிகுந்த பயனளிக்கிறது என்கிறார் வேங்கடரமணி.

ரோடில் ஒரு விலாசத்தைக் கொடுத்து, என்னைப் போய் ஜாதகம் வாங்கி வரச் சொன்னான். அப்பாடா! பொருந்தியது — மாமாவின் வடிகட்டல்களையும் மீறி. பின்னை வீட்டாருக்கும் பொருந்தி, பெண் பார்ப்பதற்கான ஏற்பாடுகள் நடந்தன.

என்னுள் சந்தோஷமும் உற்சாகமும் கொப்புளித்தன. எப்போது இது வரைக்கும் வந்து விட்டாரோ — அதுவே நல்ல சூசகம் தான் என்று எண்ணினேன். பெண் பார்க்கும் விசேடத்தின் போது நான் ஊரில் இல்லை. திரும்பி வந்ததும், நல்ல செய்திக்காக ஆவலுடன் காத்திருந்தேன்.

ஏதும் வரவில்லை. விலாசினிக்குப் பிள்ளை பிடிக்காமல் போய் விட்டதா? ஊஹூம் இருக்க முடியாது. அவன் மாதிரியே பெரிய படிப்பு படித்து நல்ல தோற்றத்துடன் இருந்தானே? பின்னே ஏன் தடங்கல்?

என்னால் பொறுத்திருக்க முடியவில்லை. அந்த ஞாயிற்றுக் கிழமையே "என்ன மாமி? எப்போ முகூர்த்தம்?" என்று உரிமையுடன் கேட்டுக் கொண்டே நுழைந்தேன்.

ஒரு மூட்டை ஏமாற்றம் மாமியின் முகத்தில் அப்பிக் கிடந்தது. சலனம் ஏதுமில்லை. மாமா என்னைப் பார்த்து, "இதற்குத்தான் அவசரப்பட்டு ஒன்றும் செய்யக்கூடாது என்கிறது! கல்யாணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர் இல்லையோ? அந்தப் பிள்ளை ஜாதகத்திலே 'மிஸ்டேக்' இருக்கிறது. (சுக்கிரன், குரு என்று எனக்குப் புரியாத சமாசாரங்கள் சொன்னார்) எனக்குக் கொஞ்சம் சந்தேகம் தான். அந்தத் திருவிடமருதூர் ஜோசியர் கிட்டே காண்பித்தேன். ஊர்ஜிதப்படுத்தி விட்டார்" என்றார்.

என்னால் பொறுக்கத்தான் முடியவில்லை; "அதனாலே என்ன மாமா? முதல்லே பார்த்த ஜோசியர் சரியாகத்தானே சொன்னார்? அவர்களும் ஒன்றும் சொல்லவில்லையே" என்றேன்.

"ஷோ வாட். நீ ஆபீஸிலே செய்யற வேலை மாதிரி இதையும் நினைச்சயா? ஜாதகத்திலே எவ்வளவு இருக்கு! உனக்கு என்ன தெரியும்?"

இதற்கு மேல் மாமாவிடம் 'ஆர்க்யூ' பண்ணுவதும், சுவரில் முட்டிக் கொள்ளுவதும் ஒன்றுதான் என்று எனக்குப் புரிந்து விட்டது. விலாசினியின் வதனத்தில் ஏமாற்றம் அப்பட்டமாகத் தெரிந்தது. யார் பக்கமும் பேச முடியாத ஒரு தர்ம சங்கடமான நிலை மாமிக்கு —

புஸ்தகங்களையும், பத்திரிகைகளையும், பார்ப்பது போல் பொழுதைக் கடத்தினேன். மாமா வெளியே போனதும், "என்ன மாமி இது! நல்ல இடம் — பொருத்தமான பையன். ஒருத்தர் சரியா இருக்குன்னு சொன்னால் போதாதா?" என்றேன்.

மாமி ஜீவனற்று என்னை நிமிர்ந்து நோக்கினாள். "அதெல்லாம் சரிதான். இவருக்குக் கொஞ்சம் அரைகுறை ஜோசியம் தெரிஞ்சிருக்கே! ம், என் தலையெழுத்து" என்று சொல்லி நிறுத்தினாள்.

"யார் அந்தத் திருவிடமருதூர் ஜோசியர்.?"

விலாசம் சொன்னாள் மாமி.

மேற்கு மாம்பலத்தில் அந்த ஜோசியரின் இடத்தைக் கண்டு பிடிக்கச் சிரமம் ஏதும் இருக்கவில்லை. என்னை அறிமுகம் செய்து கொண்டு விலாசினியின் ஜாதகத்தைக் காண்பித்தேன். "தெரியுமே. ஜாதகத்தில் வியா

# புதிய தலைமுறை புதிய தலைமுறை

திரு கவி. சிவம்
*(சமயச் சொற்பொழிவாளர்)*

பொருளியல் பட்டம் பெற்ற திரு கவி. சிவம், சட்டம் பயின்றவர். தமிழ் நாடு தெய்வீகப் பேரவையின் இளைஞர் அமைப்பின் மூலம் பட்டிமன்றப் பேச்சாளராய் அறிமுகமான இவரை முழுநேரச் சமயச் சொற்பொழிவாளராக மாற்றியவர் காஞ்சிப் புதுப் பெரியவர்கள்தான்.

"சமுதாயத்தில் சமயச் சொற்பொழிவாளர்களுக்கு எல்லா வகையிலும் ஆதரவு உள்ளது" என்று மனம் நிறையக் கூறும் திரு கவி. சிவம் உலக மதங்களுக்கான பல்கலைக் கழகம் ஒன்று தகுதியான இடத்தில் அமைய வேண்டும் என்று ஆசைப்படுகிறார்.

கி.வா.ஜ.வின் இலக்கிய நளினம், வாரியாரின் கடல் மடைப் பிரவாகம், அடிகளாரின் சிந்தனைச் சிறப்பு தெளிவுகள் இவையே சொற்பொழிவுகளில் மக்களை நாட்டம் கொள்ளச் செய்கின்றன என்று கூறும் இவர் குமாரவாடி ராமானுஜாச்சாரியாரிடம் முறையாக வைணவ இலக்கியங்களைப் படித்து வருகிறார்.



"அறுபது எழுபது வயதுப் பெரியவர்கள் சொற்பொழிவு முடிந்தவுடன் என் முன் விழுந்து வணங்கும்போது எனக்கு அச்சம் ஏற்படுகிறது. என் வயதையே மறந்தவர்களாய் வணங்கும்போது அந்த அளவுக்கு என் தகுதியை உயர்த்திக்கொள்ள வேண்டும் என்கிற பொறுப்பும் நினைவில் பதிகிறது" என்று சொல்லும் திரு கவி. சிவம் 'நாத்திக நண்பர்களே' என்னும், தலைப்பில் வினா விடை. நூல் ஒன்றை வெளியிட விருக்கிறார்.

15 முதல் 30 வயது வரையுள்ள இளைஞர்களையும் கவர முடிவது தன்னைப் பொறுத்தவரை ஒரு சாதனை என்று கூறும் இந்த இருபத்தேழு வயது இளைஞர் நல்ல கவிஞரும் கூட. பழம்பெரும் எழுத்தாளர் திரு கவி. சுப்பிரமணியம் இவருடைய தந்தை.

முன் வந்திருக்கே. முயற்சி செய்தால் கல்யாணம் ஆகி இருக்கணுமே!'' என்றார்.

''ஆகி இருக்க வேண்டியதுதான். ''நீங்கள்தான் பிள்ளையின் ஜாதகம் சரி இல்லையென்று...'' என்று இழுத்தேன்.

அவர் புருவத்தைச் சுருக்கிக் கொண்டு யோசனை செய்தார். ''ஆமாம். கொஞ்சம் மாறிப் போயிருந்தது. ஆனால்...''

''ஆனால்'' என் இதயம் படபடவென்று அடித்தது.

''ஆனால், அந்தச் சின்ன மாறுதலால் பங்கமில்லையென்றும் சொன்னேனே! மற்றபடி அமரன ஜாதகந்தானென்றும் கூடச் சொன்னேன். வேறு ஏதாவது காரணம் இருக்கும்! பெண், பிள்ளைக்குப் பிடிக்காமலிருக்கும்...''

''அப்படியா''.' என்றேன். என்னுள் ஏதோ ஒன்று சுரீரென்று உறைத்தது. 'இந்தச் சின்ன மாறுதல் கெடுதல் இல்லை. நல்ல ஜாதகம்தான். பின்னே ஏன் மாமா இதை ஒரு போர்வையாகப் பயன்படுத்தி, ஒளிந்து கொண்டு, பெண் கல்யாணத்துக்குக் குறுக்கே நிற்கிறார்? ஏன்? ஏன்?'

**மா**மாவுக்கு என்று அவர் வீட்டில் தனி அறை உண்டு. எனக்குத் தெரியும். அவர் ஊரில் இல்லை அன்று. ஸெமினருக்காக டெல்லி சென்றிருந்தார். சும்மா புஸ்தகம் பார்க்கிற சாக்கில் அவர் அறைக்குள் போனேன்.

அலமாரி, பெட்டி எல்லாவற்றையும் குடைந்தேன். கல்லூரியில் லெக்சரராக இருந்தவராதலால், பழைய புஸ்தகங்கள், பெர்சனல் டைரிகள், இது என்ன? பழைய டைரி.... பழுப்பேறி யிருந்தது. ஏன் இதை மட்டும் பத்திரமாக வைத்திருக்க வேண்டும்? தப்புதான் என்று தெரிந்தும், அதைப் படித்துப் பார்த்தேன்.

என்னுள் மின்சாரம் பாய்ந்தது. விலாசினியின் திருமணத்தை ஒத்திப் போடுவதற்கான காரணம் தெரிந்து விட்டது. டிடிட். படித்து கல்வியில் மிகவும் முன்னேறியிருக்கும் மாமாவுக்கு இவ்வளவு மூட நம்பிக்கையா என்ற எண்ணம் தோன்றினாலும் காரணம் கண்டு பிடித்தாயிற்று — இதற்கு என்ன பரிகாரம் என்று என்னையே கேட்டுக் கொண்டேன்.

டயரி, புஸ்தகங்கள் எல்லாம் அப்படியே திரும்ப வைத்தேன். நான் பார்த்துக் கலைத்த கவடு ஏதும் தெரியாமல், ஜாக்கிரதையாக நடந்து கொண்டேன். மனக்குள் ஒரு தீர்மானம் செய்து கொண்டேன்.

**ப**த்துப் பதினைந்து நாள் சென்றிருக்கும். நான் மாமா வீட்டுக்குப் போனேன். ''அடடே! வாங்கோ. வாங்கோ!'' என்று மாமா யாரையோ வரவேற்பது தெரிந்தது. திவாகரும் (எட்வர்ட் எலியட்ஸ் ரோட்) அவன் அப்பாவும்தான்.

புன்னகை செய்து கொண்டேன். நான் கேட்டுக் கொண்டபடி, கரெக்டாக வந்து விட்டார்களே!

சில நிமிடம் உலக நடப்பு, அரசியல், இவைகளில் பொழுது கழிந்தது.

அப்பாக்காரர் விஷயத்துக்கு வந்தார். ''இவன் — திவாகர் பிடிவாதமா இருக்கான். உங்க பெண்ணைப் பிடித்து விட்டதாம்.''

மாமா சிரித்துக் கொண்டார். ''என்ன செய்ய? எனக்கும் உங்க சம்பந்தம் பிடிச்சிருக்கு. ஆனால் ஜாதகம் சரி இல்லையென்று ஜோசியர் சொல்லி விட்டாரே!''

---

# புதிய தலைமுறை புதிய தலைமுறை

**மஹாராஜபுரம் திரு ராமச்சந்திரன்**
*(கர்நாடக இசை)*

**ம**ற்ற எல்லா மாநிலங்களையும் விட கர்நாடகாவில்தான் பெரும் அளவிலான 'டீன் ஏஜ்' ரசிகர்களைக் காண முடிகிறது. சின்ன வயசுக்காரர்களே சங்கீத நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து மகிழ்வதும் அங்குதான். இதே ஆர்வம் தமிழகத்திலும் சிறிது சிறிதாகப் பரவிக் கொண்டிருக்கிறது என்கிறார் திரு ராமச்சந்திரன்.

பி.எஸ்ஸி. பட்டம் பெற்ற இவர் ஸ்டேட் பாங்கில் பணியாற்றுகிறார். அந்த வேலையில் முன்னேறி மேலே வருவதைவிட, சங்கீதத் துறையில் முழுமையாக ஈடுபட்டுப் புகழ் பெறுவதே இவருடைய விருப்பம். தாத்தா மகாராஜபுரம் விசுவநாதய்யரிடம் ஆரம்பப் பயிற்சி பெற்று, தந்தை மகாராஜபுரம் சந்தானம் அவர்களிடம் உடன் பாடுபவராக இருந்து வந்த இவர் தனிக் கச்சேரி செய்



ததுமுதல் முதலாக 1970ல். இப்போது இவர் வயது 30.

கிரிக்கெட், வாலிபால், கேரம் ஆட்டங்களில் ஈடுபாடுள்ள திரு ராமச்சந்திரன் ஏ. எம். ஜெயின் கல்லூரியில் படித்தபோது கர்நாடக இசை, இந்துஸ்தானி இசை இரண்டு போட்டிகளிலும் முதல் பரிசு பெற்று மாணவர்களை அதிர்ச்சி அடையச் செய்தார்.

தாத்தாவின் பாணியோடு மட்டும் இல்லாமல், அரியக்குடி, மதுரை மணி அய்யர் போன்ற மற்ற வித்வான்களின் பாணியையும் பின்பற்றி, எல்லா ரசிகர்களையும் திருப்திப்படுத்த வேண்டும் என்ற ஆசை உண்டு. அதைச் செயல்படுத்தியும் வருகிறார்.

1978ஆம் ஆண்டுக்கான சிறந்த ஜூனியர் பாடகர் என்ற விருதைக் கிருஷ்ண கான சபாவில் பெற்ற இவர் இந்த ஆண்டு அங்கு மாலை 6-00 மணிக் கச்சேரி செய்ய விருக்கிறார்.

பொய், பொய் என்று உரக்கக் கூவ வேண்டும் போல் உதடுகள் துடித்தன. அடக்கிக் கொண்டேன். நான் திவாகரனின் தகப்பனாரைப் பார்த்தேன். கண் சிமிட்டினேன். ஜாடை காட்டினேன். 'சொல்லுங்களேன்' என்று ஜாடை காட்டினேன்.

''நமக்கோ வயதாகி விட்டது. இனிமேல் நம்ம பிள்ளைகளின் லைஃப்தாலே முக்கியம்?'' என்று ஆரம்பித்தார். தொடர்ந்து ''உங்களுக்கு மேலே நான் ஒரு ஜோசியப் பைத்தியம், தெரியுமோ? என் பிள்ளைக்குக் கல்யாணமானால், என் ஆயுசு முடிந்து விடும்னு கூட எவனோ சொன்னான். அதற்காகவே பயந்து, பிள்ளைக்குப் பெண் பார்க்காமலே இருந்தேன். அப்புறம்தான் தோன்றியது. நாம வாழ்க்கையை அனுபவிச்சாச்சு. குழந்தைகளாவது சந்தோஷமா இருக்கவேண்டாமா?'' என்றார்.

மாமாவின் முகம் விழுந்து விட்டது. பதில் சொல்ல முடியாது திணறினார். ''எங்களுக்கு மட்டும் ஆசை இல்லையா என்ன? ஆனால் அந்த ஜாதகம்'' என்று தடுமாறினார்.

''பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பிடித்து விட்டது. ஜாதகம் பொருந்தவில்லையென்று சொல்ல முடியாது. ஏதோ ஒரு சின்ன விஷயத்தில்தானே?''

என்ன சொல்வதென்று தெரியாமல் மாமா சிரமப்படுவது தெளிவாகப் புரிந்தது. ''சொல்கிறேனே, காரைக் கிராமத்திலே ஒருத்தர் இருக்கிறார். அவரிடம் காண்பித்து...''

''ஓ. தாராளமா. நாம வாழ்ந்து அனுபவித்தாகி விட்டது. நம்ப பிள்ளை பெண்ணோட வாழ்க்கைதானே முக்கியம்!'' என்று மறுபடி அழுத்தமாகச் சொன்னார் திவாகரின் அப்பா.

நான் மாமாவையே கவனித்துக் கொண்டிருந்தேன். நிச்சயம், நான் எதிர்பார்த்தது நடக்கும் என்று ஊகித்தேன்.

**ந**டந்தது. விலாசினியின் கல்யாணம் நிச்சயமாகி பங்குனி மாசம் பத்தாம் தேதி நடந்தது. லேசான கலக்கம் மாமாவின் முகத்தில் தெரிந்தாலும், வருகிறவர்கள் போகிறவர்கள் கலகலப்பு, கல்யாணக் களை எல்லாமாகச் சேர்ந்து, அந்தக் கலக்கத்தைப்போக்கி விட்டன.

லட்சுமி மாமியின் முகம் பூரா உற்சாகம்.

கமலா தனிமையில் என்னிடம் ''ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணத்தை நடத்தனும் என்பார்கள். நீங்கள் பிள்ளையின் தகப்பனாரை ஒரே ஒரு பொய் சொல்ல வைத்து விட்டீர்கள்! அவருக்கு ஜாதகப் பித்து என்பது பொய்தானே?'' என்றாள்.

''அந்தப் பொய்தான் எனக்காக, நான் கேட்டுக் கொண்டபடி அவர் சொன்னார். பின்னே விஷத்துக்கு விஷம்தானே மருந்து!'' என்றேன். ''டயரியைப் பார்த்தேனே புரிஞ்சுதோ? அந்தக் காலத்திலிருந்தே மாமாவுக்கு ஜோசியப் பைத்தியம். எவனோ ஒரு ஜோசியன் 'பெண்ணுக்குக் கல்யாணமாகி, நீங்கள் தாத்தா ஆனவுடன் மரணம் ஏற்படும்!' என்று சொல்லியிருக்கிறான்! அதை அப்படியே நம்பி, அதற்காகவே விலாசினி கல்யாணத்தை ஒத்திப் போட்டு வந்திருக்கிறார்!''

கமலாவின் கண்கள் விரிந்தன!

---

# புதிய தலைமுறை புதிய தலைமுறை

**திரு உத்ரா பாலகிருஷ்ணன்**
(புகைப்படக் கலை)

**"டா**க்டர், என்ஜினீயர் போன்று போட்டோகிராஃபரும் கௌரவமான தொழில் ஒன்றில் ஈடுபட்டிருக்கிறார். 'ஏய்! போட்டோகிராஃபர் இங்கே வா' — என்கிற மாதிரி அழைப்பது தொழிலைக் கேவலப்படுத்துவதாகும்'' என்பது புகைப்படக் கலைஞர் உத்ராவின் அழுத்தமான கருத்து.

இருபத்தெட்டு வயது இளைஞர் உத்ரா பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் எடுத்த படம் முதன் முதலாக தினமணிக் கதிரில் அட்டைப் படமாக வெளி வந்தது. ஒரு குழந்தையின் குதூகல வெறியுடன் ஒவ்வொரு பேப்பர் கடையாகப் போய், தான் எடுத்த படம் எல்லா அட்டைகளிலும் இருக்கிறதா என்றுபார்த்தபோது கடைக்காரர்களின் எரிச்சலுக்கும் ஆளானார்! ஒரு இதழை வாங்கக் கூட இவரிடம் அப்போது சில்லறை இல்லை!



ஹிந்தி இலக்கியத்தில் எம். ஏ. பட்டம் பெற்ற இந்த இளைஞருக்கு உர்து மொழி நன்கு தெரியும். முஷாயிராவில் பங்கு கொண்டு பாடுவதும் உண்டு. இப்போது ஹிந்தி இலக்கியத்தில் பி.எச். டி. செய்து முடித்திருக்கிறார். மிமிக்ரி, நாடகம் இவற்றிலும் திறமையானவர்.

பல திருமணங்களில் இவர் 700, 800 படங்கள் கூட எடுக்க நேர்ந்ததுண்டு. ஆனால் ''திருமண ஆல்பங்களில் நூறு படங்களுக்கு மேல் இருந்தால் பார்க்கிறவர்களுக்குப் போரடித்துவிடும்'' என்கிறார்.

இவருடைய காமிராக் கண்கள் உலகிலேயே மிக அழகானவர்கள் என்றுகருதுவது தமிழ் நாட்டுப் பெண்களைத்தான்.

பதினைந்து வயதிலிருந்தே இத்தொழிலில் ஈடுபட்டுள்ள உத்ராவின் குரு இவருடைய மூத்த சகோதரர் திரு சந்திரமோகன்.

—சுப்ர பாலன்

on the spot

# வீட்டிலே சினிமா



ஸ்டுடியோ செட்டுகளுக்கு மவுசுபோய் ரொம்ப நாளாகி விட்டது. இப்போதெல்லாம் தயாரிப்பாளர்கள் பலர் அந்தப்பக்கம் தலைவைத்துக் கூடப்படுப்பதில்லை. காரணம் செலவு அதிகம். கிராமமோ நகரமோ அவுட்டோராக இருந்தால் நல்லது என்று எண்ணுகிறார்கள். அதற்கேற்பக் கதை தேடுகிறார்கள். இல்லை, வீட்டில் நடப்பதைத்தான் படம் எடுத்தாக வேண்டுமென்றால் அசல் வீடு அல்லது குடிசையையே தேடிப்போய் விடுகிறார்கள். அதிலும் சில வீடுகளுக்குத்தான் திரும்பத்திரும்ப சான்ஸ்! நட்சத்திரமார்க்கெட் ஏறி இறங்குவது போல இந்த வீடுகளுக்கும் மவுசு கூடிக் குறைகிறது.

''மற்றவை நேரில்'' படப்பிடிப்பு, சென்னை நகருக்கு அருகில் உள்ள சோழ மண்டல் கலைக் கூடத்தில் ஒரு நாள் நடந்தது. பின் இந்திரா நகரில் உள்ள ஒரு வீட்டில் பல நாள். படப்பிடிப்பு நடக்கும் வீடு என்றால் அந்த வட்டாரத்துக்கே கண்டிப்பாகத் தெரியும். மேனன் பங்களா என்று கேட்டால் போதும், புரிந்துபோகும். ஜெயதேவியின் சொந்தப் படம் ''மற்றவை நேரில்''. வீட்டு வாசலில் கார்களும் வேன்களும் நிறுத்தப் பட்டிருந்தன. பல்வேறு வகையான 'ஒயர்கள்' வான்களிலிருந்து புறப்பட்டு உள்ளே நெளிந்து சென்றன. காலைப் பார்த்து வைக்க வேண்டும். இல்லா விட்டால் வாரிவிடத் தயார்!

அறை கொள்ளாத அளவு தலைகள். அந்த அறையில் நம் தலையும் சேரவேண்டுமா என்று சந்தேகப்பட்டுக் கொண்டே எட்டிப் பார்த்தேன். 'லைட்ஸ்' என்று ஓர் அதட்டல். 'ஸ்டார்ட்' என்றது இன்னொருகுரல். பூர்ணம் விசுவநாதன் அமர்ந்திருந்தார். அவர் அருகில் கிழிந்த சட்டையுடன் ஒரு பையன். இருவரும் வசனம் பேச, சில நிமிடங்களிலேயே 'கட்'. மற்றொரு அறையில் குறைவானமுகங்கள் தெரியவே அந்தஅறைக்குள் நுழைந்தேன். அங்கே நடிகையும், தயாரிப்பாளருமான ஜெயதேவி, விஜயன், புது முகங்கள் பத்மினி, நித்யா ஆகியோர் காணப்பட்டனர். மௌனியைக் கண்டுபிடித்தேன்.

''இவர்கள் வித்யாசமானவர்கள்'' படம் நன்றாய் ஓடியதை அடுத்து மற்றொரு வித்தியாசமான படம் எடுக்கவந்துள்ளேன். ஒரு வேலையில்லா இளைஞனின் வாழ்க்கையில் நடக்கும் சில சம்பவங்களை மையக் கருத்தாக வைத்துக் கதை எழுதியுள்ளேன். நான் இப்படத்தில் நடிக்கவில்லை. காரணம் எனக்குப் பொருத்தமான பாத்திரம் இதில் இல்லை'' என்றார்.



✖ மௌனி



✖ சியாம் சுந்தர்



✖ 'பூரகம்' ஜோதி, மணிமாலா

கதை வசனகர்த்தா, டைரக்டர் மௌலி.

இப்பொழுதுதான் மெல்ல நடிக்க ஆரம் பித்திருக்கிறார் விஜயன். பட உலகில் அவரது பருவ நிலையைக் குறிப்பிடுவ

தாக எண்ண வேண்டாம்! 'தனி மரம்' படப் பிடிப் பின் போது கால் உடைந்து அந்தக் கட்டுடனேயே சமாளித்து நடித்து வந்தார். ''கட்டை இப்போது எடுத்து விட்டேன். ஆனால் ஓட முடியவில்லை'' என்றார்.

இதற்குள் லஞ்ச் பிரேக் வந்துவிடவே தமக்குச் சம் பந்தமே இல்லாத ஒரு காட்சியில் என்னென்ன வசனங்கள் எழுதப்பட்டிருக்கின்றன என்பதை மிகவும் சுவாரஸ்ய மாகப் படித்துக் கொண்டி ருந்தார் நித்யா. ஒவ்வொரு நாற்காலியாக உட் கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தார் பூர்ணம் விசுவநாதன். தயிர் வடை தேசிகன் உணவு பரிமாறு பவரிடம் ஏதோ கிசுகிசுத்துக் கொண்டிருந்தார். பரிமாறுபவரோ இல்லை என்பது போல் தலையை ஆட்டிக் கொண்டிருந்தார். ஒரு வேளை தயிர் வடை கேட்டுத்தான் ஏமாற்ற மடைந்தாரோ என்னவோ! திரும்பவும் படப் பிடிப்பு துவங்கி யது. இப்பொழுது மின்சாரம் போதவில்லை. அதை எப்படியோ சரிக்கட்டி தாஜா செய்து சமாளித்தார்கள்.

அங்கிருந்து கிளம்பி வரும்போது 'ஸ்டுடியோவா வீடா? படமெடுக்க எது அதிக வசதி?' என்று நினைத் துப் பார்த்தேன். ஸ்டுடியோ தளத்தில் கேமிரா வளைய வர இடமிருந்தது. வீட்டில் அப்படி அல்ல. இருக்கு மிடத்தை வைத்துக் கொண்டுதான் ஒப் பேற்றவேண்டும்.

இப்பொழுது எல்லோருமே வீட்டுக்குப் போக ஆரம்பித்து விட்டார்கள் — படம் பிடிக்கத்தான்! ஷித்து ரங்கராஜன் வீட்டில் அவரது சொந்தப் படம் உருவாகிறது. குகநாதன் இயக்க அவர் வீட்டி லேயே படப் பிடிப்பு நடக்கிறது. பால சந்தர், சரோஜா தேவி வீட்டை நோக் கிப் போய் விட்டார். லதா இதற்காகவே ஒரு வீட்டை வாங்கி நாள் ஒன்றுக்கு ரூ. 1500 வாடகை வாங்குகிறாராம்; இதைத் தவிர பல்வேறு பெரிய மனிதர்களின் வீடுகள் இருக்கவே இருக்கின்றன. போதாதா?

—சலன்

✖ ஜோதி

✖ பாஸ்கர்

# எமனுக்கு எமன்

"**ய**மன்டா!'' — நர வேஷத்தில் இந்திர லோகத்திலும் யம லோகத்திலும் கதா நாயகன் சிவாஜி கணேசன் அங்கத மொழியில் வெளுத்துக் கட்டுகிறார்! இந்திரனின் பழைய 'கசப்பு' நிகழ்ச்சிகளை அள்ளித் தெளிக்கிறார்! யமலோகத்தில் யமதூதர்களை ஒன்றுகூட்டி அவர்களை விடுமுறைக்காகப் போராட வைக்கிறார்! ரம்பை, மேனகை ஊர்வசியை 'ஆட்டி'ப் படைக்கிறார்!

பூலோகத்திலிருந்து ஒரு நரன் சென்று இத்தனை சாதனைகளையும் எப்படிச் செய்ய முடியும்? யோசிக்கிறீர்களா? அதுவும் கடவுள் கொடுத்த வரம்தான் — கனவு! அதுதான் அந்த உலகங்களுக்குப் போக பாஸ் போர்ட்!

படத்தில் நடிகர் திலகத்துக்கு இரட்டை வேடம். யமனுக்குச் சக்கைப் போடு போடுகிறார். யமன் இருமல் மாத்திரையைச் சுவைக்கும் அழகு. காபரே நடனத்தை ரசிக்கும் பான்மை 'சூபர்ப்!' யம வேஷம் நடிகர் திலகத்துக்கு ரொம்பப் பொருந்துகிறது! அதற்காகவே ஒரு முறை படம் பார்க்கலாம்.

ஸ்ரீப்ரியா கதாநாயகனோடு ஆடிப்பாடிக் குதித்து டூயட் பாடுவதோடு 'திருப்தி'ப்பட்டு விடுகிறாரே! நடிப்பதற்குப் படத்தில் நல் வாய்ப்பு வேண்டும் என்று அவர் யமதூதர்களுக்குப் போட்டியாக ஒரு போராட்டம் துவங்கி யிருக்கலாம்.

கதை அம்சம் தேடிப் போகிறவர்கள் தேடிக் கொண்டே இருக்க வேண்டியதுதான். மாறுதலான ஒரு தமாஷ் அவ்வளவுதான். அதுவும் ஒரிஜினல் இல்லை. ஒரு தெலுங்குப் படத்தின் புனர்ஜென்மம்!

சொர்க்கலோக தமாஷ் - என். எஸ். கே. செய்யாததா?

இந்த வண்ணப் படத்தினை டைரக்ட் செய்யும் பொறுப்பை ஏற்றிருப்பவர் யோகானந்த்! அவருக்கு யோகந்தான். அதிகம் சிரமப்பட அவசியமில்லையல்லவா?

யமனுக்கு யமன் — ஒரு நட்சத்திரக் கொலு!

**- பி. எஸ். எம்.**

---




ரப்பரைப் பார்த்து எழுத்து சொன்னது :
''என்னை அழிக்கிற ஒவ்வொரு பொழுதும் நீயும் ிறிது அழிகிறாய்.. இறுமாப்புக் கொள்ளாதே.!''
- எம். எஸ். ராமச்சந்திரன்

---

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

**...இதர, டிட்டர்ஜென்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.**

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.

இதர டிட்டர்ஜென்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.

காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.




நீங்களே கண்டுகொள்வீர்கள்

இதை வெளுத்தது வேறொரு டிட்டர்ஜென்ட பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்

அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-RIN.40-2012 TM

